பிர்ம்மமே ஸத்யம்

# ஏது மெய்வழி?

வேதாந்த மல்லாத சித்த மார்க்க வெளி ஒளி
முதலிய துவைத மார்க்கங்களை வேதாந்த
மெய்வழி என்று கூறும் நூல்களைப்
பற்றிய ஆராய்ச்சியும், உண்மை
மார்க்க விளக்கமும்

ஆக்கியோன்:

**சாது சுப்பையா அவர்கள்**

காரியதரிசி:

வேதாந்த விசாரணைச் சங்கம்

விஜயபுரம், திருவாரூர்.

வேதாந்த விசாரணைச் சங்கத்தின்

32-வது வெளியீடு





விலை] 1939 [அணா 3

1875 483

பிர்ம்மமே ஸத்யம்

# எது மெய்வழி?

வேதாந்த மல்லாத சித்து மார்க்க வெளி ஒளி முதலிய துவைத மார்க்கங்களை வேதாந்த மெய்வழி என்று கூறும் நூல்களைப் பற்றிய ஆராய்ச்சியும், உண்மை மார்க்க விளக்கமும்

2049


ஆக்கியோன்:

சாது சுப்பையா அவர்கள்





காரியதரிசி:

வேதாந்த விசாரணைச் சங்கம்

விஜயபுரம், திருவாரூர்.

வேதாந்த விசாரணைச் சங்கத்தின்

32-வது வெளியீடு





விலை] 1939 [அணா 3


1939 — 3அணா



அத்வைதகேசரி :

ஸ்ரீயுத. சௌந்தரராஜர் அவர்கள்,

தலைவர் : வேதாந்த விசாரணைச் சங்கம்,

விஜயபுரம், திருவாரூர்.

5-6

# முன்னுரை.



இரங்கூன் "பர்மா மித்திரன்" பத்திரிகையின்
மாஜி ஆசிரியரும், பிரபல தமிழ் நூற்களின்
ஆசிரியரும், திருவாரூர்: வேதாந்த
விசாரணைச் சங்கத்தின் மாஜி
காரியதரிசியுமாகிய

## ஸ்ரீ K. G. ராஜு அவர்கள்

எழுதியது.

தமிழ் நாட்டில் அத்துவைத துவைத சம்வாதங்களும், ஆஸ்திக-நாஸ்திக வாதங்களும் தொன்றுதொட்டே நடந்து வருகின்றன. இத்தர்க்கங்களால் பொதுமக்கள் சுருதி-ஸ்மிருதிகளின் நுட்பொருள்களையும், பிரகிருதியின் நுண்ணிய மர்மங்களையும், அநுபவ சித்தாந்தங்களையும் எளிதிலறிய ஏதுவிருந்து வருகிறதென்பது விகசிதம். சம்வாதங்களில் ஈடுபடுவோர் தங்களின் கொள்கைகளை நிர்த்தாரணம் செய்ய அவர்கள் கையாளும் பிரமாண - பிரமேயங்களால் பொதுமக்கள் புத்தி விகாசத்தையடைய அநுகூலமேற்படுகிற தென்பது மிகையாகாது. எனவே, இத்தகைய அறிவியல் தர்க்கங்களை எவரும் இதய பூர்வகமாய் வரவேற்பதே நேர்மையுமாகும். ஓர்கொள்கையை நிலைபெறச்செய்ய வெளிப்போந்த ஒருவர், எதிர்வாதக்காரரின் கொள்கையையுமறிந்து தாரதம்மியங்களைச் சீர்தூக்கிக்காட்டி பொதுமக்களை தம் கொள்கையை அவலம்பிக்கும்படி அழைப்பதே முறையாகும்.

'எனது மொழியே தேவமொழி' எனும் கொள்கையில் நிலைத்து நின்று எதிர் அபிப்பிராயத்தைத் தடுக்க பயமுறுத்தல் கோபம். விசுயம், மற்றோர் தலையீட்டைக்கோரல் சபித்தல், நிந்தித்தல்போன்ற குறுகிய முறைகளைக் கையாளுதல் எவரும் மறுக்கவும் - வெறுக்கவும் தக்கதாகும். அறிஞர் உலகிற்கும் புறம்பானதாகும்.

தனது அபிப்பிராயத்தைப் பொதுமக்களிடம் சமர்ப்பிக்க ஒருவருக்கு உரிமையிருந்தால், அதை மறுத்துச்சொல்ல மற்றொருவருக்கு உரிமையில்லாமலில்லை. எதிர்மொழி ஏற்படாது தன்மொழியை நிலைநிறுத்த ஒருவர் விரும்பினால், அவர் சர்வாதிகார உரிமைப்பெற்றவரா யிருத்தல்வேண்டும். ஜன சமூகத்தின் பகுத்தறிவை ஒரு வரையறைக்குள்கட்டுப்படுத்தி சூன்யநிலைக்குக் கொணர்தல் ஆகாதென்ற பரந்த நோக்கத்துடனேயே, ஜனநாயக அரசாங்கங்களில் பிரஜா உரிமையைத் தாராளமாக வழங்கியிருக்கின்றனர். தங்களுக்குப் பெரும்பாதகத்தை விளைவிப்பதாயினும் ஜனநாயக அரசியலார் பேச்சு சுதந்திரம், எழுத்துச்சுதந்திரம் ஆதியனவற்றில் குறுக்கிட்டு எதிரிகளைமடக்க முற்படாதிருப்பதே எமது முந்தியகூற்றை அறிவுறுத்தும். இந்நிலையில் தனிப்பட்ட ஒருவரோ, அல்லது சிலரைக்கொண்ட ஓர் ஸ்தாபனமோ மற்றொருவரின், அல்லது சிலரைக்கொண்ட மற்றோரு ஸ்தாபனத்தின் பிரஜா உரிமையில் (பேச்சு சுதந்திரம், எழுத்துச்சுதந்திரம் ஆதியனவற்றில்) குறுக்கிட்டு மடக்கிவிடுவ தென்பது பரிகாசத்திற்கிடமான கேலிக்கூத்தாகும்.

பொது ஜனங்களிடையே பிரசுரவடிவில் சமர்ப்பிக்கப்படும் ஓர் அபிப்பிராயத்தைப்பற்றி குணதோஷங்களை யெடுத்துச்சொல்ல மற்றவர்க்கும் உரிமையுண்டென்பதை நன்குணர்ந்தே எங்கள் வேதாந்த விசாரணைச்சங்கத்தார் உண்மை

வேதாந்தத்திற்கு விருத்தமாய் பொது மக்களிடம் புகுத்தப் படும் அபிப்பிராயங்களை ஆக்ஷேபித்து அவ்வப்போது நூல் களாகவும், துண்டுப்பிரசுரங்களாகவும் விநியோகித்து வரு வதை தமிழ்நாடு நன்கறியும்.

சித்தர் கொள்கையினர் எனக்கூறிக்கொண்டு நாஸ்திக வாதத்தில் முனைந்தவர்களும், சுயமரியாதை இயக்க நாஸ்திகர் களும், குறுகிய மனப்போக்கில் வேதாந்தப்பிரசாரம் செய்ய முற்பட்டவர்களுமான பலரின் கூற்றையும், அவரவரின் போக்கிற் கேற்றவாறு மறுத்து எங்கள் கொள்கைப்படிக் குள்ள மெஞ்ஞானத்தை விளக்கிக்காட்டியும் எங்கள் கடமை யைச்செய்து வந்துள்ளோம். இவர்களுள் குறிப்பாக சென்னை அட்வொகேட் தோழர் M. சிங்காரவேலு செட்டி யார் அவர்கள் B.A., B.L., காஞ்சிபுரம் நாஸ்திக C. K. குப்புசாமி. நாகை சித்துநூல் ஆராய்ச்சியாளர் திரு. D. சிவப் பிரகாசம்பிள்ளை, திருவாரூர் கருணையானந்த ஞானபூபதி ஆகியோரில் எவரும் எங்கள் எதிர்வாதத்தில் குறுக்கிட்டுத் தடுக்க பயமுறுத்தல், வசைமாறி பொழிதல், சபித்தல், கோ பித்தல் போன்றவைகளைக் கையாளவில்லை. ஆனால் இப்பிரசுர முயற்சியால் நாங்கள் பலவிதப்பட்ட நவீன எதிர்ப்புகளுக்கு இலக்காக நேர்ந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும். மெய்வழி நூலைப்பற்றிய எங்களின் ஆட்சேபத்தை எங்கள் தலைவர் அந் நூலின் அதிபருக்கு விநயமாயும், நேரிய முறையிலும் தெரி வித்ததின் பயனாய், அந்நூலுக்குச் சம்பந்தப்படாத (அந் நூலின் நூன்முககர்த்தர் நீங்கலாக) பலரின் வசைமொழிகளும் பயமுறுத்தல்களும், எச்சரிக்கைகளும் நிறைந்த கண்டனக் கடிதங்களால் அநாயாசமாய் எங்கள் தலைவரும் நாங்களும் தாக்கப்பட்டு வருகிறோம். அறிஞருலகில் பண்டு தொட்டு நடைபெற்றிராத இச்சம்பவம் நவீன காலபோக்கிற் கேற்றது போலும்!

அத்துவைத கோட்பாட்டில் சுவாமி விவேகானந்தரின் சொரூப அத்துவைத கொள்கையை அவலம்பித்துவரும் எங்கள் சங்கத்தார், தங்கள் கொள்கையை வியாபிக்கச்செய்யும் வகையில் வேறு துறையில் மக்கள் திருப்பப்படுவதை பார்த்துக் கொண்டிருப்பதற்கில்லை. தன் கடமையை உணர்ந்து செயலில் புகும் ஒருவனோ அல்லது ஒருஸ்தாபனமோ மற்ருேரின் பயமுறுத்தல்போன்ற குறுக்கிட்டால் தன் கொள்கையை நிறைவேற்ருது பின்வாங்கிவிடுவதென்பது நகைப்பிற் கிடமானகாரியமாகும். ஆதலால் இப்பயமுறுத்தல்களை நாங்கள் பெரிதெனக்கொள்ளாது எங்கள் கடமையைச் செய்வதில் ஈடுபடுகிருேம்.

விஜயபுரம்,
1—4—39 } K. G. ராஜு.



வேதாந்த விசாரணைச் சங்கத்தார்

# விளக்கம்



சமீபத்தில் எங்களுக்குக் கிடைத்த "மெய்வழி நூல்" என்பதிலுள்ள ஆக்ஷேபங்களை கட்டுரை வடிவாக்கி முடித்தத் தருவாயில், பூஜ்யரான எங்கள் சங்கத்தலைவர் அந்நூலின் அதிபருக்கு விநயமாயும், நேரியமுறையிலும் ஓர் கடிதமெழுதி எங்கள் மனப்பான்மையை விளக்கினர். அவர் கடிதத்தில் குறிப்பிட்டபடி ஆக்ஷேப நூலின் அதிபர் விரும்பினல் கட்டுரையின் 4 பிரிவுகளையும் தருவித்துப் பார்த்து ஆக்ஷேபங்களுக்கான பதிலை தெரிவித்திருக்கலாம். அல்லது ஆக்ஷேபங்களையே அசட்டை செய்திருக்கலாம். அவ்வாறின்றி நூலுக்கும், ஆக்ஷேபங்களுக்கும் சம்பந்தமில்லாத பலரைக்கொண்டு உசிதமில்லாத பதங்கள் நிறைந்த கடிதங்கள் எழுதசெய்திருக்க வேண்டியதில்லை. இக்கடிதங்கள் பல எங்களுக்கு அனுப்பச் செய்துள்ளதின் நோக்கமும் விளங்கவில்லை. மெய்வழி நூலின் நான்முகத்தாரின் கடிதம் ஒன்றும் மற்றொன்றும் நீங்கலாக பிறயாவும் ஒருவகைய தாயபதத் தொடர்புகளுடன் எழுதப்பட்டுள்ளதும் குறிப்பிடத்தக்கதாகும். பயமுறுத்தல் எச்சரிக்கை, அவதூறு இவை நிறைந்த இக்கடிதங்களுக்கான பரிகாரத்தைத் தேடிக்கொள்ள எங்களுக்கு நன்குதெரியும். ஆயினும் எங்கள் கொள்கைக்கேற்ப இவற்றைப் பெரிதெனக் கொள்ளாது இத்தகைய அர்த்தமற்ற குறுக்கீடுகளுக்கிடையே இந்நூலை தமிழரின் இதய கமலங்களில் சமர்ப்பிக்கிறோம்

இங்ஙனம்,
வேதாந்த விசாரணைச் சங்கத்தார்,
விஜயபுரம், திருவாரூர்.

திருவாரூர் - விஜயபுரம், வேதாந்த விசாரணைச்சங்கத்தின்
மாஜி-காரியதரிசியும், 'பிர்மஞானம்,' 'கைவல்ய
ரகசியம்,' 'உலகின் உண்மை,' 'ராஜகுஹ்ய
ஞான வாசகம்,' 'ஆத்ம ஞான அமுத
மொழிகள்,' முதலிய வேதாந்த
நூற்களின் ஆசிரியருமாகிய

## ஞானசேகரம்

# ஸ்ரீலஸ்ரீ இணைகர் சுவாமிகள்,

அருளியது.

(அறுசீரடி ஆசிரிய விருத்தம்)

ஆதியந்த மற்றதுவா யகிலசா சாமாகி
ஆனந்த போதமான
நேதியிலா சைதன்ய வபரோக்ஷ மெஞ்ஞான
நேர்மையுறு குஹ்யமஃதை
போதியகல் லளவினிலே யநுபவத்தே மக்களுக்கு
பொருந்து மாறு
நீதிமுறை வழுவாதிங் கெடுத்துமிகக் காட்டுகிற
நிலையின் மேலான்
நன்னயமே பெற"வெதுமெய் வழி"யென்ற வோர்நூலை
நவின்ற நாவன்
உன்னதமாய் ஸ்ரீசாது சுப்பையா வெனும்வல்லோ
னுதவி மீக்கொண்
டின்னமுதா யியற்றிபல சங்கைகளை நிவர்த்தித்தே
இறவா நீதி
பொன்னதுபோ லன்பர்மிகப் போற்றிடவே சன்மானம்
புரிந்தான் மன்னே!



இந்நூலாசிரியர் :

சாது: சுப்பையா அவர்கள்,

காரியதரிசி: வேதாந்த விசாரணைச் சங்கம்,

விஜயபுரம், திருவாரூர்.



ஓம் தத்சத்.

# ஏது மெய் வழி?

## (1) மெய்வழி நூன்முகக் கருத்தின் பொருத்தமின்மை.

தமிழ் நாட்டில் அறிவு விளக்கத்துறையில் ஈடுபட்டோரின் கலா நிலையங்களாய் ஆங்காங்கு சங்கங்கள், சமாஜங்கள், மடங்கள், ஆசிரமங்கள் ஆகியன ஏற்பட்டுள்ளன. அவைகளைப்போன்றதே விஜயபுரம் எங்கள் வேதாந்த விசாரணைச் சங்கமென்பதும். இச்சங்க உறுப்பினர்களுக்கு ஆங்காங்கு ஆத்மார்த்த சம்பந்தமாய் வெளியாகும் நூல்களும் கிடைத்து அவைகளைப் பரிசிலனை செய்துவருவதும் மாமூலாக இருந்து வருகிறது. சமீபத்தில் செட்டி நாட்டில் திருப்பத்தூர் என்ற நகரில் "மெய்வழி சபை" என்ற ஓர் சமய சபை மூலம் 'மெய் வழி நூல்' என்ற ஓர் நூல் நமது சங்கத்திற்குக் கிடைத்தது. அந்நூலுக்கும் மெய்வழி சபைக்கும் கர்த்தா மகரிஷி மார்க்காத ஆண்டகை என்பவாகும். அவர் பூத வுடல் முகம்மது நபி (சல்) அவர்கள் மார்க்கத்தில் தோன்றியதாயினும், தற்காலம் அவலம்பிக்கும் வழி பண்டைய தமிழ் நாட்டுச் சித்தர் பரம்பரைக் கொள்கையென கூறியுள்ளார். அம்மெய்வழி நூலில் 19 நூல்கள் செய்யுள்களாக அமைக்கப்பட்டிருக்கின்றன. அந்நூலுக்கு ஆண்டகையின் பிரதம சிஷ்யர் தாசில்தார் M. மாசிலாமணி பிள்ளை, B.A

அவர்களால் 44 பக்கங்கள்கொண்ட நான்முகமும், மெய்வழி நாலினிறுதியில் சீடன் ஆனந்தக்களிப்பென்னும் 103, செய் யுள்களும் காணப்படுகின்றன. நான்முகத்தில் நமது வேதாந்த விசாரணைச் சங்கத்தாரால் ஏற்பட்ட அபிப்பிராய பேதங்களை விவரிக்கவேண்டியது எமது கடமையாகும். அம் மெய்வழி நூல் நான்முகத்தில் கூறுவதாவது: "உலகில் மெய்வழியைப் புகட்டும் மார்க்கங்களை எத்தனையோ ஆயிரக்கணக்கான வரு ஷங்களுக்கு முன்னரே நமது மகரிஷிகள் மக்களுக்குப் போதித்தருளினார்களென்றும், சர்வ ஜடப்பொருள்களும் மூலப் பிரகிருதியென்னும் வெளி ஒளியில் அடங்கி அதனின் றும் மீண்டும் விண்முதலாய ஐவகைப் பூதங்களாய் விரிந்து கலந்து வெளித்தோற்றத்தில் வருவன வென்றும், இவ்வதி ருக்கும நிராகார வெளி ஒளியும் என்றைக்கும் நிலைத்துள்ள அழிவில்லாத மெய்ப்பொருள் என்றும், அதனின்று விரிந்து தோன்றி பலவகைப்பட்ட மாற்றங்களுக்குள்ளாகும் காணும் பொருள்களனைத்தும் நின்ற நிலை பெயர்த்து அழியக்கூடிய பொய்ப்பொருள் என்றும், தற்கால விஞ்ஞானிகள் கண்டறி யாத உலகில் மற்றோர் கூறுகிய உயிர்ப்பொருள் பொய்யைச் சார்ந்து நிற்குமாகில் அழிந்து மாறுதலடையுமென்றும், மெய் யைச்சார்ந்து நிற்குமாகில் அழியா மெய்நிலையடையுமென்றும் இவ்வாறு மனிதனுடைய ஜட உடலானது அதன் மூலமாகிய வெளி ஒளி மயமாகுமானல் அது அழியாது பொற்றேகமாகி முத்தொழிலெனும் பெருந்தொழிலை யுடையதாகும் என்றும், மெய்யிது பொய்யிது என்றுணர்ந்த பின்னர் மனிதன் பேசும் பேச்செல்லாம் மறை மொழியாகும் என்றும் கூறியுள்ளார்கள். இதுவரைக் கூறிவந்த மெய்வழி நான்முகக் கருத்துகளைப் பரிசிலனை செய்வோம்.

"மெய்வழி என்பது ஒரு இடத்திற்கு மெய்யாகவே போய் சேரும்மார்க்கத்திற்கு மெய்வழி யென்றும், குறிப்

விட்ட இடம் போய் சேரமுடியாது இடையிலேயே விட்டு விட்டு இருந்த இடத்தையும் விட்டு அடையும் இடத்திற்கு வழியும் தெரியாது விடப்படுகிறவழி பொய்வழி என்றும் கூறப்படும். சகல ஜடப்பொருளாக விண்முதலாய பூதங்கள் மூலப்பிரகிருதி யெனும் வெளி ஒளியில் ஒடுங்கியிருந்து விரிந்து வெளி வந்ததாம். விண் என்பது ஆகாயத்திற்குச் சொல்லுகிறார்கள், அவ்வாகாயம் வெளியல்லாது அது ஒரு பூதவஸ்துவென்று யாராவது கூறக்கூடுமோ? நுண்ணிய பரமாணுக்கள் முதல் ஜடபதார்த்தங்களனைத்தி னிருப்புக்கு எது அவகாச முடையதா யிருக்கிறதோ அதைத்தான் ஆகாய மென்பர். அவ்வாகாசம் எப்படி வெளி ஒளியில் ஒடுங்கி யிருக்கமுடியும்? அப்படி ஒடுங்கியிருந்தபோது எங்கும் வெளி ஒளி வடிவாயன்றோ இருந்திருக்கும்? அந்நிலையை உணர் வதற்கு விகாச வியஷ்டி வேண்டுமே? அந்த ஜகம் வெளி ஒளி யில் ஒடுங்கியிருந்ததாய் எந்த பண்டு ரிஷிகளும் சொல்லவில்லை யே? புராதன அறிஞர்கள் சர்வஜகத்தின் சமஷ்டிக்கு பிர கிருதி யென்றும், வியஷ்டிக்கு விகுருதி யென்றும் கூறினர் கள். விருக்ஷம் சேர்ந்த தொகுதிக்கு வனம் என்றும், தனித் தன்மைக்கு மரம் என்றும் கூறுவதுபோல் கூறினர்களேயன்றி வெளி யொளியே பிரகிருதி யென்று கூறவில்லை. நித்தியமான வெளி ஒளியில் அநித்தியமான ஜடஉலகம் எப்படித்தோன்றக் கூடும்? அப்படியாயின் வெளி ஒளியும் கண்டவஸ்து தானே! தகப்பன் காரணமாய் மகன் தோன்றினு னென்றால் ஒன்று நித்தியமும் ஒன்று அநித்தியமுமாகும் என்னும் கூற்று மெய் வழியாகுமா? சர்வ ஜகத்தும் நின்ற நிலை பெயர்ந்து அழியக் கூடியதாயின் அழிந்துபோன ஜகம் மறுபடியும் அந்த பஞ்ச பூத ரூபத்துடன் எப்படித்தோன்ற முடியும்? வெளி ஒளி சம்பந்தமில்லாதபடி மெய்வழியார் கூறும் பஞ்சபூத உலக மிருக்க எந்த அறிஞராவது உணர்ந்ததுண்டோ? வெளி

ஒளியே இத்திருசியமய மாகத்தோன்றுகிறதே யல்லாமல் அதற்கு அன்னியமாக உலகில்லை என்பது அறிஞர்களின் முடிவாகும். உலகின் மற்றோர் கூறு உயிர் என்றால் அவ்வுயிர் விண்ணுதி யுலகமில்லாமலும், வெளி ஒளியுமல்லாமலும், ஓர் தனி மூன்றாவது பொருளாகின்றது. அவ்வுயிர் மூலப்பிரகிருதியையும் ஜகத்தையும் சேராமல் வேறு எதிலிருந்து வந்தது? அவ்வுயிரைச் சிலர் ஜீவனென்றும், சிலர் பிராணனென்றும், சிலர் பாசவயப்பட்ட பசுவென்றும் நவிலுகிறார்கள். அது எதுவாயினும் மெய்வழி சித்தாந்தப்படி நித்திய அநித்தியங்களுக்கிடையில் அநித்தியத்தின் கூறாக இருப்பதாய் ஏற்படுகிறது. மூலப்பிரகிருதியும் உலகுமின்றி ஒரு பொருளுமில்லை யென்பதும் மெய்வழியாரின் போக்காகும். வெளி ஒளி வடிவ நித்தியத்தன்மையிலிருந்து தோன்றிய உலகின் ஒரு கூறாகிய உயிர், தன்னியலான நித்தியமாயிருக்க அவ்வுயிர் பொய்யைச் சார்ந்து அவ்வண்ணமாய் இருப்பதாய் கற்பித்துக்கொண்டதும் மெய்வழியாகாது. எனவே, நித்தியப் பொருளினின்று அநித்திய உலகு தோன்றியதென்பதும் மெய்யன்று. இடையில் உயிர் என்பது உண்டென்பதும் உண்மையன்று என்பது எமது முடிவாகும். மேலும் நூன் முகத்தார் கூறுவதாவது, அவ்வுயிர் தான்சார்ந்திருந்த அநித்திய உலகாகிய ஜடத்தினின்று விடுபட்டு நித்தியமாகிய வெளி ஒளி வடிவைச்சாருமானால், அவ்வுயிரைச் சார்ந்த ஜட உடலும் மெய்ப்பொருள் மயமாகி அழியாது பொற்றேகமாய் விடும் என்பதாகும். இதில் நமது சங்கையாவது: அவ்வுயிர் மெய்ப்பொருளைச் சாரும்போது அதுமுன் சார்ந்திருந்த ஜடத்தைப் பொய்யென்று மதித்தாலல்லவோ மெய்ப்பொருளைச்சாரமுடியும்? அப்படி பொய்யென்று தள்ளிய பூத உடலை நித்தியமாக்கவும் பொற்றேகமாக்கவும் எப்படி முடியும்? செம்பைப் பொன்னுக்கும் இரசவாத வித்தையா யிருக்கலாம்

போலும்! சுதந்தர மற்ற உயிரைக்கொண்டு மனிதனுடலை ரஸவாதம் செய்யும் மூலப்பிரகிருதி அப்பணியைத்தானே நேரே செய்துவிடல் அப்பிரகிருதிக்கு அசாத்தியமாகுமா? மூலப்பிரகிருதி மெய் வடிவமென்றால், அது எப்பொழுதும் மெய்வடிவேயாகும். அதில் பொய்யொன்றும் கலப்பதற்கில்லை. பொய்ப்பொருள் கலப்பானால் அது பொய்ப்பொருளேயன்றி மெய்ப்பொருளாகாது. இது வேதத்தின் மூாசாம்.

மேலும் மெய்வழிநூல் நான்முக கர்த்தர் கூறுவதாவது, இவ்வாறான உத்தம மெய் நிலையைத்தங்கள் அனுபவத்திலேயே கண்டுணர்ந்து அந்நிலையில் நிலைத்து நிற்கும் பேற்றினையடைந்து மனிதவர்க்கமும் ஈடேறுமாறு தம்மையண்டி பின்பற்றிய தொண்டர்களுக்கும், மெய்வழியைப் போதித்து அருளினார்கள் என்றும், குறை நிலையிலுள்ள மாந்தர் பூரண நிலையடைய வேண்டினால் அந்நிலையடைந்த பெரியோர் ஒருவரைத்தேடிப் பின்பற்றவேண்டுமென்றும், "ஆணவ மாதிய வாப்பை ஆவிதா னவிழ்க்கவுமறியா தானே யவிழா என்றும் குறைபாடுற்ற பாபியாயுள்ள மனிதன் இன்பக் கடலாகிய புண்ணிய புருஷனைச் சார்ந்து தனது குறைகளை நீக்கிக் கொள்ளவேண்டுமேயன்றி தன் முனைப்பினால் தானே விலக்கிக்கொள்ள முயல்வது இயற்கை யறிவோடு வாழும் மிருகத் தன்மைக்கும் கீழாகும்" என்றும் 8-9-பக்கங்களில் கூறியிருக்கிறார். மேற்கூறிய "ஆணவமாதிய" என்ற செய்யுள் துவைத சித்தாந்த பதி, பசு, பாசக்கொள்கையுடைய செய்யுளாகும். அதைச்சார்ந்த மெய்வழியார் வழியையும் ஆராய்வோம். ஆணவ மாதிய வாப்பு இவர்கள் கூறும் உயிருக்கு ஏற்பட்டிருக்கிறது. அந்த ஆப்பை கழற்ற ஒரு குரு ஈஸ்வரர் தேவையானால் அந்த உயிருக்கு ஆணவ ஆப்பு அடித்தவர் ஒருவர் இருக்கவேண்டுவது நியாயமல்லவா? அந்த ஆப்பை அடித்தது யார்? ஒன்று வெளி ஒளியாகிய பிரகிருதி

யடித்திருக்கவேண்டும். அல்லது அவ்வுயிரின் வேறோர் கூறு கிய அநித்திய விந்நுநி உலகு அடித்திருக்கவேண்டும். அநித்திய உலகோ தன் சுதந்தரமற்றது. ஒன்றின் ஆதாரத்தி லுண்டாயது, அப்படிக்கும் சக்தி அதனிடமில்லை வேறு மூலப்பிரகிருதியே அவ்வாணவமல ஆப்பை அடித்திருக்க வேண்டுமென்றே ஏற்படுகிறது. அப்பிரகிருதி பரிசுத்தமான உயிருக்கு அநீதியாய் என் மலங்களைச் சேர்ப்பித்து மனித வடிவில் குரீஸ்வராய்வந்து மலங்களைப் போக்க முயற்சிக்க வேண்டும்? இம்மாதிரியான கர்மம் நிராகாரவெளி ஒளிக்கு ஏற்பட ஞாயமுண்டோ? இந்தத் தத்துவம் மெய் வழிக்கு பொருத்தமாகுமோ? அவ்வுயிர் ஆணவமாதி மலங்களில் கட்டுப்படுவது தனக்குத் தெரிந்திருந்தால் எப்படியாவது தப் பித்துக்கொள்ள முயற்சியாவது எடுத்திருக்கும். உலகில் எவ்வகைத்தாய உயிர்களும் தானடைய விரும்புவது இன்பமே யாகும். அப்படியிருக்க, அவ்வுயிர் முயற்சிக்காததற்குக் கார ணம் என்ன? அவ்வுயிர்தான் ஆணவமாதி மலங்களில் கட் டுப்பட்டது தனக்குத் தெரியாதிருக்கும்போது, குரீஸ்வரால் தனது ஆணவமாதி மலங்கள் அவிழ்க்கப்படுவது மட்டும் எப்படித் தெரிந்துகொள்ள முடியும்? அந்நிலையிலுற்ற உயிர் எப்படி குருவை உணரும்? உபதேசத்தை எப்படி அறியும்? மெய் பொய்ப்பொருள் எதெதுவென்று எப்படி விவேகிக்கும்? பேயோட்டும் சிகிச்சை போலிருக்கிறது இச்சித்தாந்தம். ஆதலால் உயிர் என்று எதைச் சொல்லுகிறார்களோ அதற்கு ஆணவமாதிய ஆப்பு எவரும் அடிக்கவுமில்லை; அவ்வாப்பை ஒருவரும் கழற்றுவதும் கிடையாது. இயற்கை யறிவோடு வாழும் மிருகத்தன்மைக்கும் மேலோங்கியும், ஆணவ ஆப்பு கழன்றும் பொற்றேகமாகியோருக்கு ஆப்புகழற்றாததற்கு முன்பிருந்த பூத உடல் கழன்று விட்டதோ? முன்பிருந்த விந்நுநி பூத சம்பந்தமான உடல்தானே இருக்கக் காண்

கிறேம்? பழைய பூத உடலே பொன்னுடலாய் விட்டது என்று கூறினாலும் அதுவும் சொப்பனம்போன்ற பொய்க் கூற்றேயன்றி மெய்யன்று. எனவே எப்படி இவ்வழியை மெய்வழியென நம்பி ஒருவரை ஒப்புயர்வற்றவராகவும், வழி காட்டியாகவும், இரக்ஷகராகவும், ஆண்டவனாகவும், குரீஸ்வ ராகவும், பரமபுருஷனாகவும் நம்பி பின்பற்றுவது என்பதை முக்கியமாய் ஆலோசிக்கவேண்டியதை நான்முக கர்த்தரே நவில வேண்டும். மேலும் மெய்வழி நான்முக கர்த்தா கூறு வதாவது "இக்காலத்தில் அறிவின்மிக்கார் என்று இறுமாக் கும் மக்களில் பலர் தாங்கள் அடையவேண்டிய பேரின்ப நிலை ஒன்று என்றாலும் அதனை அடையும் மார்க்கம் பல உள. ஒன்றல்ல, எதுபோலெனின் பல்வேறு ஆறுகளில் இழியும் நீரும் இறுதியில் ஒன்றாகக் கலக்கும் தன்மையை ஒக்கும் என்பர். இது மெய்யறியாதார் சொல். இந்நீரனைத்தும் எவ்வாறாக கடலில் கலந்ததென்பதை கூர்ந்து கவனியுங் கள், அவையெல்லாம் தனித்தனியே ஓடாமலும், வழியில் நில்லாமலும், ஆற்றொழுக்கு வழியில் சேர்ந்து ஓடிச்சென்று ஒன்றாயின, அவ்வாறின்றி நதிகளில்லாத ஓடை நீரும் குளத் து நீரும் கிணற்று நீரும் கடலை யடைவதில்லை. ஆதலால் பல் வேறு மக்களும் ஒரே வழியாகத்தான் பூரண நிலையை அறிந்து நடந்து சேரவேண்டும்" என்றும் நவிலுகிறார். நாம் சொல்லு வது யாதெனில் இவ்வுலகில் பகுத்தறிவுள்ள மக்கள் தோன் றியகால முதல் அநேக அறிஞர்கள் தங்கள் தங்கள் கொள் கைகளை பலமார்க்கங்களாக நிறுவியிருக்கின்றனர். நதிகள் சில நேராகவும், சில சுற்றியும் கடலை யடைவதுபோல் முடிவில் ஒரே யிடத்தை அடைகிறது. இதில் நதியின் ஜலம் ஒரே வழி யாகத்தான் சென்றடைகிறதென்பது எப்படி பொருந்தும்? நதிகளைத்தான் முன்னோர்கள் கூறினார்களேயன்றி குளம், கிணறு, ஓடை ஜலத்தைப்பற்றி ஓர் உபமானமும் கூறவில்லை

யே? மெய்வழி சித்தாந்தப்படி ஓட்டத்திலில்லாத ஜலமும் கடலில் போய் சேர்ந்துவிட வேண்டுமோ? ஒரே வழியில்தான் பூரண நிலையை அடையவேண்டுமானால் இத்தனை நதிகள் ஏன் ஏற்படவேண்டும்? நதிகள் வழிகளாகுமல்லாது அடையும் நீரும் அடையப்படும் நீரும் ஒன்றுதான் என்று உணரும் மட்டும் வழி அவசியமென்று அனேக மார்க்கங்களை நிறுவியிருப்பதாய் தெரிகிறது. அவர்கள் அறிவிற்மிக்கார் என்று சொன்னதில் என்ன குற்றமுள்ளது? இதில் இவர் மெய்யறிந்து சொன்னது என்ன விளங்குகிறது? மேலும் மெய்வழி நான்முக கர்த்தா கூறுவது யாதெனில் "உலகில் தோன்றிய தீர்க்க தரிசிகள் அனைவரும் ஒருமார்க்கத்தையே போதித்தார்கள், ஒரு சமயத்தையே வகுத்து வளர்த்தார்கள். அவர்கள் போதனைகள் சாதனைகள் புறத்தோற்றத்தில் வெவ்வேறாக காணப்படினும் அகத்தே ஒரே நோக்கமுடையவர்களென்று உணரவேண்டும்" அசராசர பேதமாயுள்ள இயற்கை தோற்றத்திற்கும், சர்வ பேதங்களும் கடந்த அதிசூக்கும பூரண நிலைக்கும் இசைந்திருக்கும் பொருத்தத்தை நாவினால் பேசவு மியலாது. அதை அவரவர்கள் உணர்வில் உணரவேண்டும். ஆகையால் மனிதன் செய்யவேண்டுவது தன் குறைகளை நீக்கி பூரணத்தையடையவல்ல மெய்வழியைக் காட்டும் ஓர் சற்குருவை தேடியடைவதுதான். சீடன் தன் பவ நோய்க்கு தேசிகன் வாய்மொழி மருந்தாம் என்றும், ஆகையால் மெய்வழி யென்பது மக்களுக்கு பூரண நிலையையடைவிக்கும் ஓர் உலக சமயமாயுள்ளது என்றும், அதுவே தமிழ் நாட்டில் சிறப்புற்ற ஞான சித்தர்கள் பின்பற்றிய பூரண நிலையாகிய சித்தர் மார்க்கமென்றும், ஷடாங்க மார்க்கமென்றும் சன்மார்க்கமென்றும் நமது இராமலிங்கப்பெருமானால் பேசப்பெற்ற மார்க்கமும் இம்மெய் வழியே என்றும், இக்காலத்தும் வேதத்துருவ நிலையை உணர்த்தவல்ல ஆகாத்

துலமாவென்னும் ஓர் மெய்ஞ்ஞான சித்தர் எங்களுக்கு மத்தியில் உதயமாயுள்ளார். அவர் திருநாமம் காமீல் நாயகமாகிய குரீஸ்வரர் மகரிஷி மார்க்கநாத ஆண்டகையாவார் என்றும் சிறப்பித்திருக்கிறார். நாம் சொல்லுவது யாதெனில் சமயாச்சாரியர்களின் போதனை சாதனைகள் வெவ்வேறாயினும் அகத்தே ஒரே நோக்குடைய மார்க்கத்தை போதித்திருந்தால் சமயக்குரவர்கள் பலரும் சந்தான ஆச்சாரியார்களும் தீர்க்கதரிசிகள் பலரும் சமயச்சார்பில் உலகை ஏன் சமயபோராட்டமயமாக்கவேண்டும்? துவைத சித்தாந்திகளும் அத்துவைத சித்தாந்திகளும், வைஷ்ணவ பக்தர்களும், ஆகமிகளும், பௌத்தர் காட்டியவழிகளும், நபிகள் நாயகம் முகம்மது[ஸல்] அவர்கள் நிருவியமார்க்கங்களும், மகிரிஷி மார்க்க நாதர் நிருவிய மெய்வழிக்கு எப்படி அகத்தே ஒரே நோக்குடையதாகும்? நோக்கங்கள் ஒன்றாயிருந்தால் ஒரே சமய சபைதான் இருந்திருக்கும். நோக்கத்தில் வேற்றுமையுள்ளதால் தான் வேற்றுமை யுற்ற பலவழிகள் ஏற்படலாயிற்று. அசாசரமாயுள்ள தோற்றம் இயற்கையானால் இயற்கைக்கு பேதமேது? எந்தப்பொருளாவது செயற்கையின்றி பேதப்படுமா? அசாசரத்தோற்ற வஸ்துவைக் கடந்த பூரண நிலைக்கு அசாசரத்துடன் இணைப்பு எப்படி ஏற்படும்? ஒன்றைக்கடந்து நிற்றலுடன் சையோக சம்பந்தம் ஏற்பட்டால் அசாசரமென்பதும் பூரண நிலைதானே? உணர்வு அசாசரபேத மற்றலன்றோ பூரண நிலையாகும்? அசாசர பேதமும் கண்டு, பேதமும் கடந்து ஒரு நிலையும் கண்டு இரண்டிற்கும் இசைப்பும் காணும் உணர்வு எப்படி ஆச்சரியப்படத்தக்கதாகும்? சித்தர்களென்போர் ஞானிகளாகார். சித்தியடைந்தவர்கள்தான் சித்தர்களாகும். பக்தரும், யோகிகளும் தான் சித்தர்களாவார்கள். பூரண நிலை யெய்துவது ஞானத்தாலானது. அவர்களைத்தான் முக்தர்கள் என்பதுமாகும். சித்தர்கள் பூரண நிலையடைந்தவ

றென்ருல் பூத உடலை அழியாமல் செய்வோமென்றும், பொற்றேக மடைந்தோமென்றும், அமிர்த தாரணையடைந்தோமென்றும், செத்துப்பிழைக்க பழகினேமென்றும் இல்லாதவற்றைக் கூறமாட்டார்கள்.

சர்வபரிபூரண உருவெளியில் நிற்கும் சொற்பன நிலைமாறிப்பரிபூரண உருவின்சாகரமாக அனுபவிப்போரே மெஞ்ஞானிகள் ஆவார்கள். அவர்கள் தான் முக்தர்களாவார்கள். சன்மார்க்க சபாபதியாகிய இராமலிங்க சுவாமிகள் தனது மார்க்கத்தை அகம், அகப்புறம், புறம், புறப்புறம், என்னும் நான்கிடத்தும் கடவுள் பிரகாசமுளது என்றும், பிண்டத்தில் ஆன்மா அகமென்றும், ஜீவன் அகப்புறமென்றும், புறம், மனமென்றும் புறப்புறம் இந்திரியங்களென்றும் இதுபோல் அண்டத்தில் அகம் அக்கி. அகப்புறம் சூரியன், புறம் சந்திரன் புறப்புறம் நக்ஷத்திரங்களென்றும் ஆக அண்டத்தில் நான்கிடம் பிண்டத்தில் நான்கிடம், எட்டு இடங்களிலும் கடவுள் பிரகாசம் காரியத்தாலுள்ளது என்றும், காரணத்தாலுள்ள இடம் பிண்டத்தில் புருவமத்தி. அண்டத்தில் பரமாகாசம். காரியகாரணமாயுள்ள இடம். சர்வயோனியினிடத்திலும் விந்து விளக்கமாகிய மின்னிடத்திலும் நாதவிளக்கமாகிய இடியினிடத்திலும் இருப்பதுமல்லாமல், பாரோடு விண்ணுப் பார்த்தோர் ஜோதி என்றும், ஜோதியுள் ஜோதியென்றும், மேற்குறித்த அகமாகிய ஆன்மப்பிரகாசமே ஞானசபை. அப்பிரகாசத்திற்கு உள்ளிருக்கும் பிரகாசம் கடவுள். அந்த உள்ளொளியின் அசைவு நடனம். இதுதான் ஞானகாச நடனமென்றும், அசைவுற்றதே நடராஜரென்றும், ஆனந்த நடனமென்றும், பொற்சபை ரஜிதசபை கனகசபை முதலிய இடங்கள் யாவற்றிலும் கடவுள் பூரண இயக்க விளக்கம் காரியமாயும் காரணமாயும், காரணகாரியமாயுமிருக்கிறது என்றும் திருவிளிருக்கிருர்கள். மேலும் ராமலிங்க சுவாமிகள் கூறுவதாவது

"கடவுளை நாம் அடைவதற்கு அவர் எழுந்தருளியிருக்கும் கோட்டையின் சாவியாகிய அருள்வேண்டும். அன்பினலல்லது அவ்வருள் அடைவதரிது. அவ்வன்பும் ஜீவகாருண்ய மல்லாது வாரது. ஜீவகாருண்யம் உண்டாவற்கு துவாரம், கடவுளின் பெருமையும் நம்முடைய சிறுமையும் ஊன்றி விசாரித்தலே. இவ்விசாரம்தான் முத்தியடைதவற்கு முதல் படி" என்று சுவாமிகள் கூறியிருக்கிறார்களேயன்றி ஆசானைத் தேடித்திரியவேண்டுமென்று சொல்லவில்லையே! பாரோடு விண்ணாய் பரந்த ஜோதியுள் ஜோதியுள் ஜோதியுள் ஜோதி யென்று சுவாமிகள் கூறியிருக்கிறார்களே யொழிய விண்ணதி பூத உலகு அநித்தியமென்றும், வெளி ஒளியே நித்தியமென் றும் கூறவில்லையே? அப்படியிருக்க மகரிஷி மெய்வழிக்கும் அருட்பெருஞ்ஜோதி சுவாமிகள் மார்க்கத்திற்கும் எப்படி பொருத்தமாகும்? மேலும் நான்முக கர்த்தா கூறுவதாவது யாதெனில் "மகரிஷி மார்க்கநாத ஆண்டகையார் தமது சற்குரு நாயகத்தின் கடாக்ஷத்தினலும், உலக அன்னையாகிய வாலையின் கடாக்ஷத்தாலும் பூரண நிலையை அடைய ஒட்டாது தடுத்து நிற்கும் மக்களின் ஐவகைப்பகையையும் வெல்லவல்ல திரிசூல வடிவேலையும், உலகில் தலையெடுக்கும் தீ நெறிகளைத் தகர்த்து சாம்பலாக்கி மக்களை நன்னெறி கண் புகுத்த வல்ல அரிய ஆக்ஞா சக்ராத்தை தமது இடது காத் திலும் பெத்த நிலையில் ஆனவத்தோடு அத்துவிதமாயும் கண்டமாயும் நின்று இடையில் சிறு தொழிலும் சிற்றறி வுடையதாய் மறைந்து நிற்கும் உயிரை பரநாதத்தொனி கொண்டு எழுப்பி நுண்ணறிவடைய்ச்செய்து முத்தி நிலையில் பிர்மத்தோடு அத்துவிதமாயும் அகண்டமாயும் நித்தியமாயும் நிற்க வல்லதுடியையும், வலம்புரிச்சங்கத்தையும் தமது வலக் காத்தில் ஞான முத்திரையாகப் பெற்றுர்" என்றும் கூறியிருக்கிறார். நாம் சொல்வது யாதெனில் இவர் மெய்வழி

யைப் போன்ற கொள்கையுடைய இராமலிங்க சுவாமி களுக்கு ஞான முத்திரைகள் ஏன் கிடைக்கவில்லை? இவர் மெய்வழி மார்க்கத்தில் முன் தோன்றிய சித்தர்களுக்கு அன்னை வாலை இந்த ஞான முத்திரைகளைக் கொடுக்க வில்லையோ? அனுதிகாலம் தொட்டே இம்முத்திரைகள் முன்னோர்களுக்குக் கிடைத்திருந்தால் மக்களை தடுத்து நிற்கும் ஐவகைப்பகையும், ஆணவ மலமாய்கைகளும் அக்காலத்தி லேயே தொலைந்துபோயிருக்கலாம். அவைகள் இக்கால மிருப் பதால் மகரிஷி மார்க்க நாதருக்கு அன்னையால் புதிதாய் கிடைத்திருக்கிறதுபோலும்! அசராசரப்பொருள் சர்வத்திற் கும் அன்னையாகிய சக்தி ஒருவர் வாயிலாய் தன் ஆக்ஞா முத்திரைகளை கொடுத்து தானு உலகை பரிபாலிக்கவேண்டும்? உலகமே அன்னையின் பிரதி சொரூபமாச்சுதே? தாய் தன் அம்ச ஜீவர்களை இக்கொடிய ஆயுதங்களால் தண்டிப்பாளா? அல்லது தண்டிக்கப் பிரதிநிதி ஏற்படுத்துவாளா! ஒருக்கா லும் அவ்வண்ணமிராது. பாநாத தொனிகொண்டு எழுப்ப ஜீவர்களிடமே அத்தொனி சதா தொனித்துக்கொண்டுதா னிருக்கிறது. ஆதலால் கொடிய ஆயுதமான முத்திரை தேவைக்கு அவசியமில்லையென்று ஏற்படுகிறது. மேலும் நான்முக கர்த்தா கூறுவது யாதெனில் "எங்களுடைய நாயகம் தம்முடைய அருள் பிரகாசத்தால் உலகமெங்கும் மெய்வழியாகிய ஞானமார்க்கத்தைப் பாவச்செய்யும் நோக் குடன் பல்வேறு சிடர்களுக்குப் படிப்படியாக சரியை, கிரியை, யோகம், ஞானமார்க்கங்களை போதனை செய்து கொண்டிருக்கிறார். அவருடைய ஞானம் பரம்பரையாய் தமிழ் நாட்டில் மச்சமுனி கோத்திரமென்பார்கள்" என்பதாம்— நாம் கூறுவது யாதெனில், ஓர் காலத்தில் ஆதிநாதர் ஓர் தீவி லிருந்து கொண்டு அங்கு ஒருவருமில்லையென்று கருதி பார் வதிக்கு யோகத்தை உபதேசித்தார். கரையின் சமீபத்திலுள்ள

ஜலத்திலிருந்து ஓர் மச்சம் அந்த யோகோபதேசத்தைக் கேட்டு ஏகாக்கிர சித்தமுள்ள நிச்சலாகாயமுடையதாயிற்று. அம்மச்சத்தை ஆதிநாதர் பார்த்து ஜலத்தை அதன்மேல் தெளிக்க அது திவ்ய சரீரமுள்ள மச்சேந்திரர் என்னும் சித்தராயிற்று. மச்சேந்திரர் தான் கேட்ட யோகத்தை சாபாருக்கும் படிப்படியாய் ஆனந்தபைரவர், சௌரங்கி, மீனநாதர், கோரக்ஷர் முதல் நாரதேவர், கண்டர், கபாலிகர், முதலிய மகா சித்தர்கள் அடையச்செய்தார். இவர்கள் ஹடயோகத்தின் பிரபாவத்தால் மிருத்துவை ஜயித்து பிர்மாண்டத்து மத்தியில் தடையின்றி சஞ்சரிக்கிறார்கள் என்றும் சித்தர்கள் யோக நூல்கள் தெரிவிக்கின்றன. மச்சேந்திரர் வரலாறு முதலியவைகள் ஆரியமொழி நூல்களிலிருக்கின்றன. தமிழ்நாட்டுக்கும் மச்சமுனிக்கும் என்ன சம்பந்தமிருக்கின்றது? தமிழ்மொழியின் பாம்பரை சங்கமிருந்த காலங்களில் சித்தர் வரலாறுகளும் யோகம், ஞானம், இவைகளைக் கூறும் நூல்களும் சங்கங்களிலிருந்ததாக தெரியவில்லையே? மகரிஷி மார்க்க நாதர் பிறந்த நாடு எங்கே? கைலாய பாம்பரை மச்சமுனி ஆதிநாதரால் உற்பவித்த இடம் எங்கே? ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லையே? கொள்கையிலாவது பொருத்தமிருக்கவு மில்லை. சித்தர் மார்க்கமே தமிழ் நாட்டில் தொன்றுதொட்டு இருந்ததற்கு தக்க பிரமாணமில்லாமலு மிருக்கிறது. மேலும் நூன்முகத்தில் தெரியவருவது யாதெனில், ஒரு சிறிய மாமிசப் பிண்டமாயிருந்த எமது இருதயத்தை கடல்போலிருந்து கோடி சூரியப்பிரகாசமாக ஆக்கிவைத்து அதனுள் தூலமெடுக்கும் முன்னிருந்த ரூபத்தை இதோபாரெனக் காட்டி எம்மை யாட்கொண்ட கர்த்தர் தமது அமுத மறைமொழியைக் கொண்டு உலகோர்க்குக் கொடுக்கும் வாத்தை காதினாற் கேட்டேனும் நன்மையடையுங்கள். "என்னை நீ அறிவாயாகில் இப்பவே தருவேன் கண்டாய். உன்னை நீ அறியும்

தன்மை என்று அருளிச்செய்ததுள்ளார்" என்பதாகும். நாம் நவிலுவது யாதெனில் இருதய ஸ்தானத்தைப்பற்றி அருட்பெரும் ஜோதியார் புருவ நடு மத்தி இருதயஸ்தான மென்றும் அதற்குள்ளினுமுள்ளாக நவ நிலைகளேயும், மற்றும் சிலர் சரீரத்தின் இடபாகம் (மார்பின்கீழ்) தாமரைமொட்டு போன்ற ஓர் மாமிசப் பிண்டத்துள் நுண்ணிய நாடிகளின் சம்பந்தக்கோடியிலுள்ள நுண்ணிய துவாரத்திற்கப்பால் சப்த நிலேயும் பரமாகாய வெளியும் அதனடைவும் கூறியிருக்கிறுர்கள். சில யோகிகளோ மனமொடுங்கிய சமாதி யவஸ்தைக்கு சப்த நிலைகளேக் கூறி அம் மனமிருக்குமிடம் இருதயஸ்தான மென்கிறுர்கள். ஞானிகளில் சிலரோ, "ஆத்மாவின் சாயல் அறிவு. அந்த இடமே இருதய ஸ்தான"மென்று கூறுகிறுர்கள். உடலவயவத்துள் எச்சார்பினர்,—எந்த ஸ்தானத்தை புத்தியினுல் கற்பிக்கப்படுகிறதோ அந்த இடம் இருதய ஸ்தான மென்று வைத்துக்கொள்வதாய் ஏற்படுகிறது. மெய்வழி நூலார்கள் சகல மார்க்க வழியும் ஒன்றுதான் என்று கூறுகிறுர்கள். இதனுல் நாம் எந்த வழியை மெய்வழி யென்று பின்பற்றுவது? ஒவ்வொரு மனிதனுக்கும் தன் அபேட்சை அனைத்தும் அவனவனிடமிருப்பது அவனவனுக்குத் தெரிந்திருக்கிறது. அதை யடைய சரீரம் எடுத்துத்தானே யாக வேண்டும்? நலமெடுக்கவேண்டிய அபேட்சை, உருவம், அவரவர்களுக்குத் தெரிந்திருக்க வேறு ஒருவர் ஏன் காண்பிக்கவேண்டும்? முதலில் மகரிஷி ஆண்டகை அவர்களே சிடன் உணர்ந்தால் மட்டும் சிடனுக்கு அவர் சிடனே அறியும் தன்மையை காட்டுவதாக மகரிஷி உத்தாவிருக்கிறது. தன்னே யறியாது எப்படி முன்னிலைப்பொருளே உணரமுடியும்? குருநாதனே யறியும் ஆற்றல் சிடனுக்கு இருந்தால் சிடன் தன்னே உணர்வது கடினமாகுமோ? இவற்றுல் மெய்வழியை விரும்பும் சிடன் யாதுசெய்வது என்பது 'மெய்வழியே வழிகாட்ட

வேண்டும்,' இதுகாறும் மெய்வழி நான்முகத்தைப்பற்றி ஆராயப்பட்டது.

## (2) மெய்வழி நூலின் போக்கு

இனி மகரிஷி அவர்களால் உலகிற்கு அருளப்பட்ட விஷயத்தையும் ஆராய்வோம். மகரிஷி அவர்களால் இயற்றப் பட்ட மெய்வழி நாலில் 19 நூல்களே செய்யுள்களாகப் பாடப்பட்டிருக்கின்றன. அதில் முதலாவது ஞான அகவல் என்பதாகும். அதில் 142 சீர்களிருக்கின்றன. 101 வது சீரிலிருந்து "பாசாங்கு முரீதில் பருநெருப்பிட்டு இராஜாங்க யோகம் யானறிந்திடவே தத்துவநிலையை தந்நிலறிவித்து சுத்த சைதன்ய சுகநிலை காட்டி, இராப்பகலில்லாதிடமதி லிருத்தி தாப்பாயிருத்தி தனித்திருக்கவைத்து, பாப்பானை யென்னுள் பார்த்திருவென்று, ஆப்பாயறைந்தார் அசையா நிலையில், நிலைத்தன்னிலையில் நின்று காலூன்றி குலைதனில் வைத்த குறிப்பெலாம் கடந்து, நெஞ்சமு நழுவி நிறைந்த பூரணத்தில், குஞ்சிதபாதக் குணம் பெருவடிவம், அண்டரு மறியா வரும்பத வடிவைக் கண்டதைக் கண்டான் களைப் பெலா மாறப் பண்டைநாளமுதை யுண்டுளங் குளிர்ந்து கண் டிடும் காக்ஷி விண்டுரைக்காமோ, எது முளதாய் யாது முள தாய் சேதியுமிலதாய் சேதமு மிலதாய், அணுவுக்கணுவாய் அண்டபிர்மாண்டமாய் நினைவுட்பதியும் நாதமின்னுடலே—பிணைநிகரில்லாப் பெருவான் கடையை, எனையுணரென்று வெனையறிவித்தார்" எனப் பாடப்பட்டிருக்கிறது. இதில் நாம் உணரவேண்டுவதாவது சுத்த சைதன்ய சுகநிலை காட்டி அதனுள் பாப்பானை பாத்திருவென்று அசையா திருத்தி ஆப்பும் அறைந்த இடத்தில் கொஞ்சமிருந்த நெஞ்ச மும் நழுவியபின் யார் குஞ்சிதபாத குணம் பெரும் வடிவைக் கண்டது? அந்நிலையில் நாதமின்னுடல் நினைவில் எப்படி

பதிந்திருக்கும்? அந்நிலையை அநுபவிப்பது அறியப்படுமா யின், அங்காக்ஷிகளனைத்தும் அறிவின் ஆதாரம் கொண்டு தானே அறியப்படல் வேண்டும்? அது எப்படி அகண்டா கார அவஸ்தையாகும்?

இரண்டாவது நூல் மெய்ஞானம் என்பதாகும், அதில் 6-வது செய்யுளில் "கருத்தைவிட்டகலாது கண்டத்தின் கண்டத்தின் றலை நெற்றியில் காலெரன் றேதலைமாறிச் சேர்த்திடக் காணுஞ் சவ்வுங்கி லியந்தப் பொருத்தில் நின் றிட விழுத்து விழுங்கும் பொங்குமாங் கடலின் சுழல் போன வர் மீண்டு வந்திலர் போதை கன்னி மணயிதே"—என்றும் 8-வது செய்யுளில், "சவரியத்துடற் சார்ந்திடாமலே தமர் வாசற்குள் ளோடு நாள் தாகமான பல்கோடி விஞ்சை கடல் கடந்து மேலேறிடக் கவுரிகுண்டலி வோங்கி விம்மி நிமிர்ந்து சுழன்றங் கேறவே கவனமா மணிரசமுருகியே கட்டுநாதமுங் கட்டிட உவரிபோகவு மூதவுமுதலே உன்னுடம்பதே நாதமே ஓதுமோங்கார நாதகுண்டலி யுட்கலந்து குழறவே"—என் றும் எழுதப்பட்டிருக்கிறது. அதில் நாம் தெரிந்துகொள்வ தாவது கண்டத்தின்மேல் நெற்றிக்கு இடகலை பிங்கலை வாசியை கால்மாற்றி ஏற்றினல் போதை மிக்குப் போனவர் மீள்வதில்லையாம். இது தான் மெய்ஞானமாம். மனம், பிராணன், இந்திரியங்களை நிரோதித்து உன்முகமாய் பிரஞ்ஞை யேற்று குண்டலியை நிமிர்த்தினல் கவனமணி ரசமுருகி நாதம் கட்டி உடம்போத ஸ்வரூபமாய் விடுமாம். அது தான் பொற்றேகம் போலும்! சித்த நிரோத யோகம் ஞானமாகுமா? மெய்வழி நூலில் 3-வது முரீது சருக்கம் என்பதில் 8-வது செய்யுளில், "ஒடுஞ் சுவாச மொடுங்குமிட முரீதென்றறியாவிணர் வெறும் வேடத்தையும் வேதபாடத்தையும் மண்ணில் விற்று வயிறு வளர்க்க, இது விள்ளா ரகசிய முள்ளுக்குள்ளே" என்றும்,

9-வது செய்யுளில், "நிட்டையாய வான்மதி யற்ற யிடந் தப்பி நீர்க்கின் ஸ்ரீநிதுவே யில்லாமற் குட்டுமந்திரத் தக்—கினை கொண்டக்கரை எட்டி நீ கண்டதுண்டா ஒரு சட்டி மட்டனுஞ் சோறுண்ணும் பட்டர் ஸ்ரீதுக்குச் சட்டமுள்ளது போலே சொல்வானவன்"—என்று மிருக்கிறது. இந்த ஸ்ரீதில் என்ன உயர்ந்த ரகசியமிருக்கிறது? சுவாச முதித்த விடம் உணர்ந்தவ ரன்றோ ஒடுங்குமிடம் உணரலாம். உலக இடக்கவேகம் எப்பொழுதாவது ஒடுங்கியதுண்டா? இடகலை, பிங்கலை, சுவாசகலையை சுழிமுனையில் சொற்பகாலம் நிறுத்தப் பழகி விட்டால் ஸ்ரீதாய் விடுமோ? மேலும் 10-வது செய்யுளில், "பஞ்சபூதமுங் கடந்துமே மெள்ள மூப்பாலையும் தள்ளியங்கே உள்ளில்—கொஞ்சமாய் கண்ட கொலுவாசன கருவூரையுமே கடந்து"—என்று மிருக்கிறது. இதை சற்று விசாரிப்போம் பஞ்சபூதங் கடந்த விர்த்திக்கு ஒன்றும் தெரிவதில்லை, அந்தப் பாழையார் கடக்கிறது? தெரியவில்லை யென்ற விர்த்தியை நிவர்த்தித்துக் கொள்ள வேண்டும், அது எப்படி கடந்ததாகும்? இதற்கப்பால் கொலுவாசனமும் கருவூருமேது? அதை காண்பதும் விர்த்திதானே? அது பஞ்சபூதபரிணாமமின்றி யாதாயிருக்கும்? மேலும் குருமுர்த்தி யென்னும் செய்யுள் 70-ல்—கூறு வதாவது. "இரண்டெனும் வாசியான இடையாம் பிங்கலையிற் கண்டு, ஆன் சுழிநாத வீடு அப்புப்புங் கலந்து கட்டபான் குடி புகுதவென்று," என்றும் 74-வது செய்யுளில் "போச்சுது பொல்லாங் கெல்லாம் புகழ் சுழி நாதவீட்டால் சாக்ஷியுந்துணையு மில்லா சர்வக்ஞனு மானேன்"—என்று மிருக்கிறது, வாசியைக் கண்டால் ஆன்சுழி, புகழ் சுழி நாதவீடாம், நாதானு சந்தான நிலையே சர்வஞ்ஞத்துவமாம். சிரசின் சுழிமுனையில் ஜீவவாயுவை நிறுத்து வதினால் ஏற்படும் நாதம் சர்வஞ்ஞத்தவ மென்றால் உலகில் ஏற்படும் சப்தங்களெல்லாம்

சர்வஞ்ஞத்துவம் வாய்ந்தனவாய்விடலாமே! இந்த விஞ்ஞானத் தையடைய ஸ்ரீஸ்வரரையடையாவிடில் குருமூர்த்தியாகாதோ? 76-வது செய்யுளின் அருட்பாக்களை பாருங்கள்—அருங்க ரென்றகிலக் தன்னிலருங் குரு வைப்பில்லாமற் பெரும்பதந் தானே தேர்ந்து பெற்றவன் போலே பேசிக் குறும்புகள் சேட்டை பண்ணி கொடுமை கொண்டிழியும் மாடு வீட்டினில் மேலோர்கட்கு வேலைகளில்லையென்றும், காட் டினி லிருப்பா ரென்னுங் கண்கெட்ட வண்டிமாடே ஜோட் டடிமாய் கைக் கியந்து சொன்னயக் கலிமாத்தன்னில்" என் றும் திருவாய் மலர்ந்தருளப்பட்டிருக்கிறது. அருள்பெருஞ் ஜோதி அருட்பாவுக்கும் இத்திருப்பாக்களுக்கும், எவ்வளவு அன்பு, அருள், மெய்வழி யமைப்பு ததும்பி பரிசுத்தமாயிருக் கிறது பாருங்கள். மெய்வழி நூல் 5-வது மலர் மெய்நிலை போதம் என்பதாகும், இதில் 12 செய்யுள்களால் கேள்வி கேட்கப்பட்டிருக்கிறது. 13, 14 வது செய்யுள்களில், "இத் தனை பொருளு மெந்தக் காலத்தி லறிவோமென்று, மெத்தன பேங்கியும் மிரண்டிட வேண்டாம் சொல்வேன், சுத்த சைதன்யநாதர் சொல்லொரு பொருளினாலே, செத்துநீ தினம் தினம் பழகத் தெரிந்திடும் உளவுதானே"— என்று பாடப் பட்டிருக்கிறது. மெய்நிலை போதத்திலுள்ள கேள்விகளுக்கு எவன் விடை கூறுவானோ அவன் ஜகத்குரு, சற்குரு, எம னேலை கிழித்தெறிந்தவனாகும் என்றும் கூறப்பட்டிருக்கிறது. அக்கேள்விகளில் சிலவற்றின் வழியை மட்டும் எடுத்துக் காட்டும் முறையாய் விடையும் கூறுகிறோம்.

1-வது அறிவின் உருவெளியே அங்கமானத் தோற்ற மாயிருக்க முதன் முதலாய் அங்கத்திலுதித்த பொருளேது? அங்கத்தின் சூட்சமமே ஆருயிராகும். அதற்கு நிலைப்பேது? 3, அறிவின் சம்பந்தமே நடுநிலையும் ஒண்பொருளுமாகும், 4, சிதாகாயத்திற்கு கீழும் சுழிமுனைக்கு மேலுமுள்ள ரசஸ்

தலத்தை பாற்கடலென்பது சிறப்பு பெயரேயன்றி வாஸ்தவ ஸ்தலமல்ல. 5, சத்தத்திற்கு ஆதியிருந்தால் அந்தமுமுண்டு. 6, அப்பும் உப்பும் கலந்தால் சமுத்திரம் தான். 7, பஞ்சபூதங் கலந்ததே மேதினியென்பர். அப்படியிருக்க, மேதினியில் பஞ்சபூதம் எப்படிக் கலக்கும்? பஞ்சபூதம் வேறு உயிர் வேறாயிருந்தாலன்றோ நிலைக்க தனியிடம் வேண்டும்? 9, உபதேசம் பிறந்த யிடம் புத்தியாகும். 10, அந்தர்முகப் பார்வைக்கு அகக் கண்ணும் புத்திதான். 11, ஆதி நடனம் புரிசேரிசிதாகாசம் என்பர். அது பொய்யாகும். நடனமே கானல்நீர் போலதாகும். 12, முச்சுடர் நாடி நிலை இருதயத்தின் சுழிமுனை யென்பதும் பொய்யாகும். 13, எச்சுடர் நாடியும் அறிவின் சம்பந்தமாகும். 14, உடம்பினுள்ளே அறிவே மெய்ப்பொருளாகும். 15, நில உலகு நிற்பதில்லை. மாறிக் கொண்டேதானிருக்கிறது. 16, என்றுமுள்ள சிற்சத்திக்கு வயது.பத்தேது? ஒரு காலம் பால் பருகும் குழந்தையாகவு மிருந்ததுண்டோ? 17, நாதம்தனிலிருந்து விந்துவந்ததேயன்றி விந்ததனில் நாதம் எப்படி நிற்கும்? 18, வீசிவரும் வாசி பிராணனிலிருக்கும். 19, வானில் வரும் ரவி மதியிருப்பிடம் ஆகாயமென்பது சாமானியருக்கும் தெரியும்! 20, பிராணகலை தாக்குதலால் குண்டலி நிமிருவது தலைகால் கால் தலைமேலானதாய் ஹடயோகிகள் கூறுகிறார்கள். 21, சிற்சபையைநிலைச்சரணக் கமலமோாசன மென்பர். 22, தன்னைத் தானறியும் திருத்தலப்புத்தியாகும். 23, தனக்குள் அஷ்டதிசைத் தலைவர் அறிவாகும்.

அன்னையவள் சிலம்பின் திசை நாதம் பரமாகாயமாகும். அலுப்பாறும் வைகைநதிக் கரை புத்தியாகும். 26 சின்னஞ் சிறு வாசல் சிதம்பர நடனம் புத்தியாகும். 27 சேர்ந்திரு மூவாயிரவர் குடியிருப்பு நன்னிய நாடிகளாகும். 28 இத்துணையும் மெய்நிலை போதத்தில் எழும்பிய வினாக்களுக்கு

விடைகள். நமது முடிவுரையில் விளக்கமாய் விவரிக்கப்பட்டிருக்கிறது. மெய் வழி நூல் 6-வது மலர். ஞானச் சங்கு 7-வது மலர். ஞான முறையீடு 38-வது செய்யுளில், "வாசி காலுச்சி கண்டத்தின் வழியாய் ஊசியின் தமர்வழியோடி பேசரு மூலி மண்டலக் குகைமேல் பெலஞானக் கண்ணொன் றங்கிருந்து, வாசனைக் கேள்வி யிருக்கண்வா யெவைக்கும் வல்லமை யளிக்குமக் கண்ணே, ஈசன்றன் னிருப்பும் ரவி கோடி வீசும், இருதய மலர் விரிந்தெழும்பும்" என்று கூறப் பட்டிருக்கிறது. இதிலிருந்து தெரிவது யாதெனில், வாசிக் காலுச்சி அதோகதியில் பிடரியின் துவாரவாயிலாய் மூளி மண்டலத்திற்கு மேலாய் போய்விட்டால் ஞானக் கண்ணும் அதனிருப்பிடம் ஈசனிருப்பிடமாம். கோடி சூரியப் பிரகாசம் வீசும் இருதயக்கமலமாம். இதுதான் மெய்வழி நூல் முழுதும் அனேக வர்ணனையுடன் திருப்பித் திருப்பிச் செய்யுளாக வருகிறது. இப்பயிற்சி யோகமார்க்கங்களுள் ஹடயோக மார்க்கமென்று பழைய நூற்களில் கூறப்பட்டிருக்கிறது. மேற்கூறப்பட்ட பாவனு விர்த்தியுடன் வாசியை அங்கு நிறுத்துவதால் அக்காக்ஷி உணர்ந்ததாகக் கூறு கிறார்கள். மெய்வழி நூல் 8-வது மலர் வாத கற்பம் என்பதாகும் 9-வது மலர் ஞானக்குறள் என்பதாகும். அதன் 11-வதுசெய்யுளில், "இரு புருவத்தி டையிலே ஒளிவு காணில் வருவதில்லையே காலனே" என்றும், 10-வது மலர் மெய்வழி நூல் காப்பு 2-வது செய்யுளில், "வீசுநெருப்பாறு மயிர்ப் பாலத்துக்கப்பாலே வித்தகமாய் விளங்கிநின்ற பெற்றவிடங் காட்டி" என்றும், 4-வது செய்யுளில், "தீப்பான முப்பாழுந் தாண்டி யப்பால் நிலைநிற்கா மனந்தன்னை நிறுத்திவைப்பான். காப்பான வைம்பூத மோடாவண்ணம்" என்றும், 6-வது செய்யுளில், "இடமதுவும் நிசமென்றூற் பொறிகளோடா இருந்துவிடு கோடியொளி காந்தி வீசும்," என்றும், 8-9-வது

செய்யுளில் "கொண்ட சுழிமுனைப்பூட்டு திறந்துகாட்டிவிட மதற்குள் வெளிகாட்டி விஞ்சைகாட்டி விட்டதொட்ட யிடங் காட்டி வேகங் காட்டி வேகமுள்ள கேசரியின் நடப்புங் காட்டி"—என்றும், 10-வது செய்யுளில் "துஞ்சாமுன் துஞ்சியங்கே தூங்குதற்குத் தூண்டு குருநாதனனுபோகம் வேண்டும்" என்றும் 12-வது செய்யுளில் "சீரப்பா குருவிடயந் தோற்றங் கண்டால், சொல்லாதே சொன்னக்கால் தலை ரண்டாகும்" என்றும் 15-வதில் "பாலெடுக்கும் விண்மூலமார் தான் சொல்வார். பகர்ந்தாலோநாபிளக்கும் தலைசுக்காகும்" என்றும் 16-வது செய்யுளில் "சொல்லக் கேள் ஞான வழி சுருக்க மிந்நூல் சோதித்து நேர் வழியை முறையாய்ச் சொன்னேன்"—என்றும் 17-வது செய்யுளில் "காலோடி நின்ற விடஞ் சொல்வேன்பாரு, வீணை சுழி முனையினுருகி நின்றால் வீணையின்மேல் வைத்தகை யுன்மேல் வைப்பாளே"—என்றும் 18-வது செய்யுளில்—"கைப்பான மும்மலத்தின் பயங்களெல்லாம் காதவழி குடிபிடுங்கி யோடுமப்பா"—என்றும் 19-வது செய்யுளில்—"ஊசிமுனைத் தமர் திறந்து யேறவென்று லழையாமற் போவதற்கு யாராலாகு மந்தரியே சுந்தரியே யருள்தாவென்றும் பிரணவத்தி யென்றுருகி வணங்கி நில்லே"—என்றும், 20-வது செய்யுளில்—'மெல் லடா பற்கடியா திருப்பதோடு மெல்லினமாய் நாம்பெல்லாம் தளரநில்லு நில்லாடா கால் மேலும் தலை கீழாக. நீ வலு வாய்ச் சிரசு கொஞ்சம் கவிந்து நில்லு வெல்லடா மும் மலத்தை வெல்லு வெல்லு"—என்றும் 27-வது செய்யுளில் "அங்கதேசத்திற்கு மேற்கே யப்பா அகண்ட தொரு பாலைவன மங்கே யுண்டு, திங்களணி நடுக்கண்ட மடிவாரத்தில் தேவ சக்தி மகம் மூதாபதியா மங்கே"—என்றும் 28-செய்யுளில் "அங்கேயடா கங்கைதனில் ஸ்நானஞ்செய்ய அகலாது அழியாது காயங் காயம்"—என்

றும் 48-வது செய்யுளில் "ஒப்பில்லா பெரியோரையிழிவு பேசி உயர்வோ மென்றெண்ணி யொவ்வாச் செயல் செய்வோர்க்கு இப்பொருப்பு தணிகையர் வேலுருவி விட்டால் ஈசன் வந்து தடுத்தாலும் தடுக்கப்போகா"—என்றும் 49-வது செய்யுளில் "போருமடா பசிசழிந்து அவன் முகத்தில் போய்ப்படுப்பாள் மூதேவிகாலை நீட்டி யூகமழிந்தோயாத கவலைபூண்டு உலகி லெட்டு தரித்திரமுமழுந்தப் பெற்று தேக மநிற்றோத ரோகம் ந்தாங்கிதெருவிலடி படுநாய் போற்குலைத்துக்கொண்டு எ ருசைத் தான் பிணி நாகம் போவானென்று"—என்றும் பாடப்பட்டி ருக்கிறது. இந்த 10-வது மலராகிய மெய்நூல் தான் ஞானநு பவங்களை தொட்டுத் தொட்டுக் காட்டியிருக்கிறதாம், "சாதக னேறும் வழிக்கு குன்றி லிட்டதீபம் போன்றது இந்நூலாம்" என்றும் கூறப்பட்டிருக்கிறது. இந்நூலில் தொட்டு தொட்டுக் காட்டும் நிலைகளை நாம் புட்டு புட்டு துலக்கிப்பார்ப்போம், 9-வது மலரில் சொல்லியிருக்கிற காலனுக்கு புருவநடுமத்தி யும் அதின் ஒளியும் இல்லையா? அக்காலன் நித்தியமானவனு? மெய்வழிமலரில் நாம் சங்கிப்பது யாதெனில் பிராணன் அதின்கலைகளுடன் விர்த்தி சகிதம் நெருப்பாறு மயிர்ப் பாலங் கடந்து சிகிரியில் பந்தனப் பட்டுவிட்டால் குலோரோபாமடைந்தவன் நிலையல்லவோ வாய்விடும். அங்கு பார்ப்பது யார்? காட்டுவதுயார்? விர்த்திக்கு விளங்காமை யன்றோ பாழாகும். அனித்திய ஐம்பூதம் விர்த்திக்கு காப்பாக எப்படி யிருக்கும்? விளங்காத இடத்தில் விர்த்தி தான் எப் படி யிருக்கும்? பொறிகளெல்லாம் பொய்யிடத்திலிருக்குமா? ஜீவப் பொறியையே அந்த இடத்தில் ஓடாது நிறுத்திவிடக் கூடுமோ? பிராணபந்தனத்துடன் எவ்வளவுகால மிருந்தா லும், அந்நிலையில் புத்தி விர்த்தியு மிருக்குமென்று எவராவது நம்புவார்களா? அந்நிலைக்கும் அசேதனமாகிய மரங்களுக் கும் என்ன வித்தியாசம் சொல்லக்கூடும்? சுழிமுனைப்

பூட்டு திறந்தால் வெளியில் நடுக்கண்ணும் தோன்றிவிடுமே? விட்ட தொட்ட இடம் விஞ்சை கேசரியிடமெல்லாம் விர்த்தியின் கற்பிதமேயன்றி மெய்ப்பொருளாகாது. கபாலத்தில் பிராண பந்தனம் என்ற தூங்காமல் தூங்குகிறவனே தூங்கு மனுபவத்தை யடைகிறானேயன்றி குரு அம்மாதிரி தூங்கிக் காட்டினால் சீடனும் உடனே தூங்கிவிடுவானோ? கருவிடங் கண்டதைச் சொன்னால் தலைபிரண்டாய்விடும் குருகண்டதை விண்டால் தலையிரண்டாகாதா? குரீஸ்வரர் தலைவெடிக்குந் தன்மையில் உண்மையை சொல்லயியலாதே? சீடன் கதி தானென்ன? ஆகாயமாகிய சுழி முனையில் நின்றால் வீணையின் மேல் வைத்ததை அவன் மேல் வைக்க, மும்மலங்கள் ஓடுமானால் ஆகாயமாகிய சுழி முனையில்லாதபடி பிரபஞ்சமேது? பிரபஞ்ச சர்வஜீவகலைகளும் வீணைதானே? சராசரங்களனைத்திலும் அவ்வீணையின் தொனி ஓயாமல் தொனித்துக் கொண்டு தானே இருக்கிறது. வீணையைகையில் கொண்டவள் பாரபட்சமுடையவள் என்று பகர்வதே அவளை உண்மையுடன் அறியார் கூற்றாகும். ஊசிமுனை தமர்திறந்து உள்ளே செல்ல தலை கீழே கால் மேலாகி நரம்பெல்லாம் தளரவிட்டு சிரங்கவித்து சர்க்கஸ் பழக வேண்டுமாம். 'இது தான் உயரிய ஞானமாம். அப்படியானல் சர்க்கஸ் ஜீவிகளனைத்தும் ஞானிகளேயாவதில் தடையில்லை. அங்க தேசத்தின் மேற்கே நடுக்கண்ட மடிவாரத்தில் சிற் சக்தியிடம் ஒவ்வொரு ஜீவனும் ஸ்நானம் செய்து சுழுப்தி அவஸ்தை யடைந்து வெளிவருகிறது இயல்பேயாகும். காயம் மாறுகிறதே யன்றியழிகிறதில்லை. எங்கே காயம் அழிந்ததை இவர்கள் கண்டார்கள்? மெய்வழி சொல்வதை ஒப்புக்கொள்ளாத வரை தனிகையர் வேல் உருவி விடப்படுமாம், அன்பே மயமாய் அருளேவடிவாய் வெளி ஒளியே அங்கமாய் கொண்ட நித்தியஸ்ருபத்திற்கு தன்னை வேலும் தகாத காரியமான ஜீவகாருண்யமற்ற செயலும்

புரியுமோ? அன்பு அருள்வடிவவேல் உலகில் அவ்வடிவாக வேயிருக்கட்டும் 11-வது மலர் தோத்திரமாகும், 11-வது பூரணப் புதையலாகும்- "வேதவித்தைத்தன்னிலறியாப் புழுக் கையர்கள் வேதந்தெளிந்திட்ட ஆலிமென்று வெகுபேர் நிதம் ரொம்பத் தெரிந்தவர் போல் கர்வங்கொண்டு நிதர்க்கிடர் செய்யத்தலை படும்பாவிகாள் போதநிலைப் பொருளு மெது நோதற்ற பொன்னிவள நாடது மெய்ப்பொருளு மெங்கே வைிமுனை தமர் வாசல் கண்டுதிறந்திடுவதெங்கே பின்னிலை முன்னிலையுமெங்கே தப்பி தம்பி பேச்சு முனைமூச்சின் கலிமாவதுமெங்கே மூச்சடங்கு மிடத்திலிருக்க எவராலும் முடியாது யிருப்பறிந்தெளிது தம்பி"— என்றும் பாடப் பட்டிருக்கிறது. இவைகளை சற்று ஆராய்வோம். பிரபஞ் சத்திலுற்ற பிரஞ்ஞையே போதப் பொருளாகும். அப்போதத் தின் சாயலே மெய்ப் பொறியாகும். புத்தி விர்த்தி தன்னை போதத்தின் சாயலென்று அறிவதே தன் நிலையை அறிவ தாகும். மெய்வழிப்படி பிராண நோசுகலையால் குண்டலி துவா ரவாயில் திறக்கச் செய்வது மாகும். பிராண பந்தனம் செய்து மூச்சடங்கியிருப்பது வெகு நாள் பழக்கத்தால் தான் முடியும். அது தான் கலிமாவோ? அத்துவைத மூலமொழிகளான "லா இலாக இல்லல்லாஹு" என்ற கலிமாவின் மெய்ப் பொருள் இது தானோ? 89-வது செய்யுளில் கண்டபடி "உளறுவான் தௌஹீதென்பான் காரணங்க டறியாத கசட்டு மாந்தர்" என்றும் 12-வது மலர் சோடசநிலையாகும் 13-வது பிள்ளைத் தமிழ் 14-வது மலர் பத்திய திட்டம் என்னும் நூலில்—"கண்டங்கடந்து யெமகண்டங்கடந்து அண்டாண்ட பகிரண்டமு மொன்று யிலங்கும் பதம்"—என்றும்: "நெற் றிப் புருவமத்தி பத்து மூலத்திபாத்து"—என்றும் "தன்னை யறிந்தவர்கள் யெண்ணியிரங்கவேண்டும் தன்னாலறியத்தம் மிவுன்னால் முடியாதப்பா"—என்றும் " சுருதிக் கடலிற்

சிக்கி சுழன்று மலைத்திடாதே சுருதி நின்றுடுவது சுழிமுனைப் பிடரியுச்சி—என்றும். "புழுக்கையரிதில் வாய் போட்டுப் பேசப்படாது பழுத்த ஞானநெறி பத்தியர்க் குரைத்த பதம்" என்றும் 15-வது மலர் தெளிவிது காயில் 16-வது தெளிவிம் மக்காம் என்பது, 17-வது மலர் ஆனந்தக் களிப்பு 18-வது மலர் குருமணிமாலை. 19-வது மலர் அமுதக்கலை ஞான போதம். இதில் 44-வது செய்யுளில்— "மாசிலாமணி மகனே வாவென்றருகிருத்தி சென்னி மலைவாசனுக்குள் புகுதவைத்து ஜீவனெனும் சிரஞ்சீவிக்குச் செப்புமுபதேசம் இருகாமுங்கு வித்தெதிரே யேங்குத்திருமகனில் இருந்ததனை யிருந்தபடி யிருந்தவத்தோனிறுத்தி ஏகவெளி பொட்டலங் கல் லாலடியா சனத்தில் அருந்த வங்கள் விளங்கு நெற்றிக்கண் திறந்து காட்டி ஆருயிரினிலையு மிருதயமுங் கண்ணுற் காட்டி இருதய த்திலேந்து விகக்கலப்பதுங்காட்டி இருபுருவ நடுலலாடக் கண் திறந்து காட்டி—தூலத்துள்ளேயிருந்த சூக்கு மங்கை காட்டி உருவா முன் ஈாமிருந்த ரூப மதுவுங்காட்டி—அடங் காதவொளி மலைபாய்ந்ததி சயங்காட்டினனே"—என்றும் "குறித்தபடி பிரிதியின் மண்டலத்திற்கப்பாற் குடியேறுஞ் சந்திர மண்டலமுமாச்சே ஆச்சென்று நில்லாதேய தற்கப்பாலே ஆனசத்தி ஜலமண்டலமாகும் வாச்சதென்ற பெரியோர் சாங்கிய மிங்கே வாங்கியல்லோ நிற்மலமண்டலத் திற்போவார்"—என்றும் நின்றதொருபிளயத்தி னதிசயங் கள் நெடுங்காலம் நீயிருந்தே காணவேணும்"—என்றும்— "கனகசபை சிகாமணியைக் காணவேணும் நாதாந்த வேகாக் காலறியவேண்டும் சாண்முழுத்துக் குன்னியத்திடை நடுவே சாகாதவரம் வாங்கிக் காணுவாயே"—என்றும் சாகாதவரம் பெறுதல் மைந்தாகேளு தனையறிந்து சாப்பழகிச் சாஞ்சா வென்றுஞ் சாகாதவரமிதடா வேதன் வாழ்க்கை"— என்றும் பாடப்பட்டிருக்கிறது. அமிர்தகலை ஞானச் செய்

யுள்கள் சீடர் தாசில்தார் M. மாசிலாமணிப் பிள்ளைக்கு அருளியதென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. மெய்வழி நூல் பலர் 19-ம் முடிந்தது. ஒரேமுறையான உபதேசத்தையே பல சித்தர் பரிபாஷைப் பெயர்களால் வர்ணித்துப் பல நூல்களாக பாடப்பட்டிருக்கிறது,— இனி நாம் ஆராய்வது யாதெனில் சீடர் மாசிலாமணிப்பிள்ளையை சென்னிமலை வாசலில் புகுத்தினாராம். அதற்குமுன் அவர் சென்னிமலையில் இல்லையா? புகுத்தி சிரஞ்சீவி ஜீவனுக்கு உபதேசம் செய்தாராம். சிரஞ்சீவிக்கு உபதேசம் எதற்கு வேண்டும்? சீடனுக்கு இருந்ததனை சென்னிமலைக்குள் புகுந்தவனுக்கு வெளியிலிருக்கும் குரு இருந்தபடியில் எப்படி காட்டமுடியும்? சீடனுக்கு தனது நெற்றிக்கண்ணை குரு வெளியிலிருந்து காட்டினாரா? குருவும் சீடனின் சென்னிமலையில் நுழைந்து காட்டினாரா? சிரஞ்சீவியாகிய ஜீவ நிலைக்கும், ஆருயிர் நிலை, இருதய நிலை இவைகள் வேறாகுமா? ஸ்தூலத்திற்குள்ளிருந்த சூட்சம நிலையென்றால், சொற்பனமாகி விடுமே? சொற்பனத்தை ஒருவர் காட்டமுடியுமோ? உருவாகுமுன் நமக்கிருந்த ரூபம் உருவானபிறகு மறுபடியுமந்த ரூபம் காட்டப்பட எதுவேது? காணப்படும் உலகெலாம் பிரளயமானபின் நெடுங்காலம் மாசிலாமணி மகன் எங்கிருந்து எதைக் காண்பது? நாதத்தின் அந்தமாகிய வெளியே வேகாக்காலாம். சகலரும் வெளியை நிரந்தரம் பார்த்தே வருகிறார்கள். இதில் யாது சிரேயசுள்ளது? தன்னையறிந்து சாகப்பழகினால் சாகாத நிலையாகுமாம். தன்னை யறிந்ததுமே சாகா நிலையாய்விட்ட பிறகு, செத்து செத்து பிழைக்க ஏன் பழகவேண்டும்? மேலும் பொதுவாக நாம் கூறுவதாவது:—ஒரு வழியைப் பரப்பவோ ஸ்தாபிதம் செய்யவோ அதன் கர்த்தருக்கும், அவரைச் சார்ந்தவர்களுக்கும் உரிமையுண்டு. அதை நோக்குபவர் அதன் வழி சரியானதல்லவென்று கண்டால் அதை

அவர்கள் கூறுவதற்கு உரிமையுமுண்டு. அவ்வாறு எதிர் மார்க்க உரிமையாளர், சுருதி, யுக்தி அநுபவப் பிரமாணங்களுக்கு மாறுபடாது நேரிய வழியைப் பின்பற்றி அவ்வுரிமைகளை அநுபவிக்கலாம் என்பது விதிமுறையாகும், இந்த மெய்வழி நூலில் இதைப்பற்றிய வழிப்பிசகை எடுத்துக் காட்டு முன்பே, அப்படிக் காட்டுபவர்களுக்கு பெரும் சாபங்களும் பயமுறுத்தல்களும் செய்யுளாக பாடப்பட்டிருக்கிறது. 19 மலர்களில் சில மலரிலாவது பயமுறுத்தலில்லாத மலரில்லை. சித்தர் மலர் வாசனையுடன் எதிர்வாசனையுங் கலந்தே வீசுகிறது. எங்கள் சங்கத்தின் கடமையில் முதல்தரமான இவ்வெளியீட்டை வெளிப்படுத்துவதாகிறது. ஏனெனில் மயங்கிய உலகுக்கு சிறு பயனுவது கிடைக்குமென்றே இதை வெளியிட முன்வாலானோம்.

## (3) சித்தர் மார்க்க இரகசியச் சுருக்கம்

இதுவரையில் மெய்வழி நூலின் சாராம்சங்களைப் பொறுக்கிச் சுருக்கி எழுதியிருக்கிறோம். இனி மெய்வழி நூலின் ஆராய்ச்சிக் கிரமப்படி அவர்கள் போக்கை யனுசரித்து "எது மெய்வழி" என்பதை எடுத்துக் காட்டுகிறோம். அதாவது வெளி ஒளிவடிவான பிரகிருதியினின்று ஆகாயம், வாயு, அக்னி, அப்பு, பிரதிவி, சம்பந்தமான குலாசலங்களும் அக்னி வாயு சம்பந்தமான வெளி ஒளி சிவன் சக்தியென்று கூறும் ஜீவசக்தியாக ஏற்பட்டு அதுவே ஜீவன், பிராணன், அறிவு, போதம், என்றும் அந்த ஜிவசக்தி ஜீவர்களின் சரீரத்தில் மேல்பாகமாகிய சிரசில் புருவ நடுமத்தியி லிருக்கிறது. அந்த ஜீவனுக்கு இடகலை பிங்கலை சுழிமுனை என்ற இடத்தில் சோம சூரியாக்கினி எனும் மூன்று கண்கள் உண்டு. அந்த ஸ்தானம் இருதயமாகும். அந்த இருதய ஸ்தானத்திலிருக்கும் சிவசக்தியாகிய ஜீவசக்தியிலிருந்து

சிருஷ்டி ஸ்திதி, சம்மாரம் உண்டாயின. சரீர அமைப்பின் சர்வ உள்நாடிகளும் சேருமிடம் புருவ நடுமத்தியாகிய சுழிமுனையாகும். அத்தெருப்பு கண்ணிலிருந்துதான் விந்துஸ்தான மேற்படுகிறது, வெளி ஒளி வடிவு, சிவம். அதன் இயக்கம் சக்தி—இரண்டின் சம்யோகம் நாதவிந்து ஆகிறது. சிருஷ்டிக்குக்காரணம் அதுவே. அச்சிவசக்தியே'தான்' என்பதாகும். அந்த ஜீவசக்தியை பஞ்சபூத பரிணாம புறப்பொருளுள் விடாது தன் உள்ளில் நடத்தி பிரமரந்திரத்தில் கலக்கச் செய்வதுதான் எமனேலே கிழிப்பது என்றும், மனிதன் சாகப் பழகவேண்டும். அது எப்படி என்றால் நாம் ஜீவன் என்ற நிலையை விட்டும் உலகத்தை மறந்தும் தன் சிவனை சிவனுக்கி உள்ளில் அடக்கம் செய்யும் மார்க்கத்தைப் பழக வேண்டும். அப்படிச் செய்தால் மரிக்க இடமில்லை, அந்த பழக்க மில்லாதவர்கள் சிக்கிரம் மரித்துவிடுவார்கள். அந்த ஜீவனை அடக்கம் செய்யுமிடம் பிரம ரந்திரமாகும். அது ஜீவர்களுக்கு மூடியிருக்கிறது மூடியிருப்பதை திறங்காமல் ஜீவன் அங்கு சேர்க்க இயலாது. ஆதலால், மனிதன் பிராணனையும் அபானனையும் ஒன்று படுத்தி தடுத்து நிறுத்தி அதோ முகத்தில் சிகிரிக்கு செல்லுமாறு மேல்கதியாக்கினால் அந்த ஜீவன் பிரமரந்தரத்தை திறக்கும். அதுதான் பூட்டை திறப்பது, பிர்மரந்தரத்தில் ஜீவன் கலந்தால் தானே தன் மயமாகி நின்றுவிடும். அதுதான் முக்தியாகும் அச்சிவ சக்தியாகிய பிராணனை பிடரிவழியாய் உள்முகத்தில் ஊசிமுனை வாசலைத் திறந்து சுழிமுனையைக் காணச் செய்ய வேண்டும். கண்டத்திற்கு மேல் சிரகிரியில் ஆகாய மென்பது சதாசிவனென ஜோதியாம். புருவமத்தியத்திற்கு மேல் பாகத்திலும் அந்த ஜோதியிலிருந்து கீழ் பாகம் புருவமத்தி வரையிலுமுள்ள யிடத்தில் சிவனாக ஜீவசக்தியும். புருவமத்தியின் கீழ்பாகம் நாசிவரை ருத்திரனென

அக்னியும், அதிலிருந்து நாசியின் நுனிவரை விஷ்ணுவான மனமும் அதற்கடிபாகம் பிர்ம்மாவாய அகங்காரமுமாகும் ஞான முண்டாகவேண்டுமானால் மேற்கூறிய தத்துவங்களை உணரவேண்டும். இந்த ஜீவன் எப்போது பிரமரந்திரத்தில் அடங்குகிறதோ அப்போது சிவனாகவும். வெளியே வியாபிக்கும்போது சிவசக்தியுமாகிறது. அதற்குத்தான மூலப்பிரகிருதி யென்று சொல்லுவது என்றும் அந்த சக்திதான் மனம் என்றும் உடலில் பிரதானபாகம் சிரம், அந்த சிரசிரிக்கு அடிப்பாகம் செற்கு அப்புருவ நடுமத்தியிலிருப்பதற்கு செக்ஷணமூர்த்தமென்பது, கண்டத்திற்கு மேல் நவத்துவாரங்களுண்டு. நவவாயிலுற்ற ஆலயம் சிரம், அச்சிரமத்தியம்புருவ நடுமத்தி, அங்குதான் சிவலிங்க மிருப்பிடம். அச்சிவலிங்கத்தை சுற்றிக்கொண்டிருப்பது பார்வதியாகிய குண்டலினி சக்தியாகும் என்றும் எண்சாண்பனையின் தலைமேலுறிய மதுவை லம்பிகை முத்திரையால் அதாவது உள்நாக்கின்மேல் பாகதுவாரங்களில் நாக்கின் நுனியை வைத்து ஜீவனாகிய சக்தியை அதோ முகமாக்கி புருவ மத்தியில் சலனமில்லாமலிருத்தியிருக்கும் போது தன்னிலே நிறைந்து உப்பும், அப்போது சிரசிலிருக்கும் அமிர்தம் இளகும். அதை பானம் செய்து போதையடைந்திருப்பார்கள். இவர்கள் தான் அமிர்தகலை சென்றவர்கள் என்றும், கண்டத்திற்குமேல் சிரசினில் சகல அனுபவங்களும் சொல்லி மெஞ்ஞானமென்பது பெயர்த்தும் பிறவாமையாகும் என்பதுதான் மெய்வழி நூலிலுள்ள பரமரகசியங்களாகும்.

## (4) இதுதான் மெய்வழியாகும்

"மெய்வழிச் சபை சித்தர் சார்பினர் முடிவு மீண்டும் பிறவாதிருப்பதில் முடிந்துவிடுகிறது. அதற்கு உடலின் மேல்பாகம், கண்டத்திற்கு மேல் சிரம் முடிவுவரையில்

சிரப்பிண்டத்திற்குள் அனேக அநுபவங்களை ஜீவன் அடைய வேண்டும். மோக்ஷமும் ஜீவன் அனுபவிக்கவேண்டும். அப்படிக்கின்றி ஆத்மஞானங்களைப் போதிக்கும் புராதன அநுபவங்களின் நூல்களைப் பார்த்து அனுபூதியடைவதும் இயலாது என்பன அவர்கள் முடிவாகும். ஒருவன் உலகில் தோன்றும் ஜீவவர்க்கங்களின் மாறு படுந்தன்மை நிலைமைகளை அடிக்கடிப் பார்த்து விசாரணை வாயிலாய் இவ்வுலகு என்பது என்ன? எப்படி வந்தது? இதன் உண்மை சொரூபமென்ன? வென்றும் விவேக விர்த்தியால் அறிய முற்பட்டு பயனடைவானுயின், அது அடைய வேண்டியதை யடைந்ததாகாது என்பதும் மெய்வழியார் முடிவாகும். ஒவ்வொருமனிதனுக்கும் புத்தி விர்த்தி என்பது உண்டு. அது மனதிற்குக் கொஞ்சம் ஆந்தாமாயுள்ளது, என்பதை எவரும் ஒப்புக்கொள்வர். அந்த புத்தி புருவ நடுவிலோ வேறு இடத்திலோ எங்காவது இருக்கட்டும். அந்த புத்தியால் தானே அநித்தியமாகிய உலகை தள்ளி ஜீவனை சிரக்குகைக்குள் அடைக்க வேண்டியிருக்கிறது, அங்கு அடைக்கப்பட்டிருப்பது தேசமயமான ஜீவனென்று கூறியிருக்கிறார்களே யன்றி புத்தியும் அடைக்கப் பட்டிருப்பதாக அநுபவம் சொல்லப்படவில்லை. அப்புத்தி ஜீவனுடன் கலந்தில்லாவிட்டால், சிரக்குகைக்குள் அநுபவிக்கும் அநுபவங்களை ஜீவன் மட்டும் அறியமுடியாதே? ஜீவனுக்கு அறியும் சக்தியுண்டென்றால் சுழுத்தியிலேயும் ஜீவன் அறிதல் கூடும். இவ்வளவு அநுபவங்களையும் சிரக்குகையில் அநுபவிக்கும் புத்தியும், சிரக்குகையும் அதிலுற்ற அதிசயமும் ஆகிய இவைகளை அறியும் அறிவிருந்தாலன்றி குருவிடம் சிடன் அநுபவித்த பெரும் பேற்றைக் கூற இயலாது. மெய்வழி நூலிலும் தங்கள் அநுபவங்களை செய்யுளாக பாடமுடியாது. சிரக்குகையில் நிகழ்ந்த அநுபவங்களின் அநுபவமநுபவித்தது புத்தியேயாகும். தேசோமயமான ஜீவனுக்கோ, பஞ்சபூதக்

கூறுகிய உயிருக்கோ, யாதொரு அநுபவமும் இல்லை. சாதாரணமனிதனும் உலகின் அநுபவங்களை புத்தியா லநுபவிக்கிறதிலும் இதில் விசேடமென்ன இருக்கிறது? புத்தி சிக்குகைக்குள் போகும் முன் வெளிப்பிரபஞ்சத்தில் காணுதவைகளில் சிக்குகையில் அதிகம் யாதுகண்டது என்பதிலும் ஒன்றும் காணோம். இந்திரியங்கள் வாயிலாய் மனதிற்கு விஷயம் கிடைக்கும் சமயம் அவ்விஷயங்களை நிர்ணயம் செய்யும் போதுள்ள விர்த்திக்கு புத்தியென்ற நிலை ஏற்படுகிறது. இவ் விஷயங்களையெல்லாம் தள்ளி விடபட்டால் புத்தியுமுண்டோ? புத்தியேயில்லாது ஜீவனைமட்டும் சிக்குகையில் அடைப்பதால் அநுபவமடைவது முண்டோ? இரண்டு மார்க்கங்களிலும் சிக்குகையில் அநுபவம் கூறுவது நிகழத்தக்கனவன்றும். கண்டத்திற்கு மேல் சிமுச்சி வரையில் மண்டையோடும் உடலில் சம்பந்தப்பட்ட சர்வநுண்ணிய நாடிகளும் ரசதாதுக்களும் தான் நிரம்பியிருக்கின்றன. அங்கு இத்துணை கற்பிதங்களும் வெளி உலகை உணர்ந்த புத்தியால் கற்பிக்கப்படுகிறது சிக்குகையில் மெய்வழியார் கூறும் இத்துணை சொரூபங்களுமிருக்குமாகில் ஒரு எறும்பின் சிரசிலும் அவ்வித மிருக்கத் தான் வேண்டும். மிருகம், குரங்கு முதலிய சேதன ஜீவர்களுக்கு மிருக்கத்தான்வேண்டும். இருப்பதாய் எவராலும் நிரூபிக்க இயலாது. அவைகளுக்கு அவ்வமிச குருவால் போதனையில்லை. குருவினல் சிடனுக்கு சிக்குகையின் ரகசியம் முன்னடியே புத்தியில் புகுத்தப்படுகிறபடியால் சொற்பனம்போல் சிக்குகையில் உணர்வுண்டாகிறது. ஜீவர்களின் சரீரம் தோன்றுவதற்கு சமஸ்காரமும் அதன் தாக்குதலால் சுக்கில சுரோணித சம்பந்தமும் ஏற்படவேண்டி யிருக்கிறது. அதை சோதித்தால் நிறைய நுண்ணிய கிருமிகள்தானிருக்கின்றனவேயன்றி அதற்குள் சிரமோ சிக்குகை ரகசியமோ தென்படுகிறதில்லை. கிருமிகள் நிறைந்த ஜலரூப சுக்கிலச்

சுரோணிதம் உடலமைப்பு அவயவரூபங்களுடனும் மனோதர்ம பலதரப்பட்ட பாகுபாடுடனும் வாக்காரணம் யாது? ஸ்திரீ புருஷர் காரணமென்று கூறுவதும் பொருந்தாது. அவர்களின் சமஸ்காரமென்பதும் பொருந்தாது, அகண்ட நித்திய சமஸ்காரத்தின் (சமத் ஆகார) கூறுகள் ஒவ்வொரு உருவை தனது உருவெளித்தோற்றம் பிரதி பிம்பிக்கும் ஸ்தானமாக அமைத்துக்கொள்ளுகிறது. அச்சமஸ்கார கூறின் உருவெளி தன்சக்தியை விட்டதும் உடலாகியஉருவை பிரித்துவிடுகிறது. இதை உணராமல்தான் மரணமென்றும், காலனென்றும், எமனென்றும், பயமுறுத்தி பாமரமக்களை சிரக்குகைக்குள் ஒளிந்துகொள்ள சொல்லுகிறார்கள். யாராவது எமனையோ காலனையோ கண்டதுண்டா? கூறுபவர்கள் தைரியமாய் வெளிப்படுத்தி அதிலிருந்து தப்பிக்கும்மார்க்கம் விளக்கினால் தெரியாகும். அப்படிச் சிரக்குகையில் ஒளிந்துகொண்டு இவ்வுலகத்தில் நெடுங்காலம்உடலைவிடாமலிருந்தவர்களுமுண்டோ? மகிரிஷி மார்க்கநாதர் அவர்களின் குரீசுவரர் முகமது சாலிகு என்னும் வள்ளலவர்கள் மூன்றுமுறை சமாதியிலமர்ந்து அமர் 12 ஆண்டுகளுக்கு முன்னர் சம்பூர்ண சமாதியில் அமர்ந்தார் என்று நான்முகம் 21-வது பக்கத்தில் கூறப்பட்டிருக்கிறது. சமஸ்காரகூறு ஒவ்வொன்றும் இப்பூமியின் தாதுக்களாகிய ரசாயனங்களிலிருந்துதான் உடலை தயார் செய்து கொள்ளுகிறதாக விஞ்ஞான ஆராய்ச்சியாளர் கண்ட உண்மையாகும். பஞ்சபூத தாதுக்களமைந்த இப்பூமியே சமஸ்கார ரூபமாக மாறுங்காலம் வரும்போது சிரக்குகையில் அடங்கிய ஜீவன் என்னவாகிறது? பிரியவேண்டியது தானே சேர்ந்தவைகள் சேர்ந்தபடி பிரிந்து தானாகவேண்டும். அது தான் அறிஞர் கண்ட உண்மையுமாகும். கடலில் அலைகள் தோன்றி மறைவதுபோல் உடலானது தோன்றி மறைகிறது. அத்தோற்றமும் கானல் நீர், கனு உலகம்போன்றதாகும்.

சமஸ்காரக் கூறுகளின் உருவெளிதான் புத்தி விருத்தியுமாகும் உடலின் திருஷ்டிக்கு பிறப்பென்றும், மறைவுக்கு மரணமென்றும் சொல்லப்படுகிறது. உடலை சிருஷ்டித்தவனும் மறைத்தவனும் எப்போது மிருக்கின்ருன். அவன் நித்தியன் ஆதியந்தமில்லாதவன் அவன் தன்னையார் என்று தன்கூருகிய புத்தியால் உணர்வானேயாகில், அவனுக்கு மரண பயமும் மீண்டும் பிறக்கும் பயமும் எப்படி ஏற்படும்? அந்நிலையினையடைந்தவன் எமனுக்குப் பயந்துகொண்டு சிக்கூகையில் ஒளியவேண்டியதில்லையென்று ஏற்படுகிறதல்லவா? இதைத்தான் பகவான் பார்த்தனுக்கு படுகளத்திலுபதேசித்த தாகும். துஷ்டர்களுக்கு பயந்து ஓடும் ஒருவனுக்கு மறைந்துகொள்ள ஒரு இடம்வேண்டும். அவ்வீட்டில் பயந்தவனைப்போட்டு பூட்டுவதற்கு பூட்டும், சாவியும். குருவும்வேண்டி யிருக்கிறது. அப்படி பயம் காரணமாய் ஓடி ஒளிந்தவன் கோடி சூரியப்பிரகாசமான சரணகமலாசனத்தில் பாற்கடல் பக்கம் அமிர்தம் பருகி ஏகனுகி பாவசமுற்று பொற்றேகமடைந்து நித்தியனுய் விட்டான் என்றே அல்லது துட்டர்கள் எங்குவந்து விடுவார்களோ என்று பயந்து அமைதியின்றிய நிலையிலிருக்கிருனென்றே யார் உணரமுடியும்? பயத்தின் விழைவால் பத்திரமான ஸ்திதியை நாடியவர்களுக்கு சுகலேசமும் ஏற்பட அனுபவமில்லை. உலகில் மக்கள் பூர்வ சமஸ்கார வாசனைக்குத் தக்கவாறு பத்தியில் பலதரப்பட்ட விவேக விர்த்தியையுடையவர்களா யிருக்கிருர்கள். அவ்விவேக விர்த்தியின் சக்திக்கு தக்கவாறு பின்பற்ற கர்மயோகம், பக்தியோகம், இராஜயோகம், அடயோகம், லம்பிகாயோகம், பந்தனயோகம், சமாதியோகம், ஞானயோகம் சொரூபயோக மீருக அனேக வழிகளை நம் பெரியோர்கள் நிருவி பரிபாலித்து வந்திருக்கிருர்கள். அவற்றுள் ஞானயோகம், சொரூபயோகம் என்பது தான் வேதாந்தமென்பது. ஞான சொரூபயோக அடை

விற்கு வழியாகக்கருதும் நிரோதயோக சமாதியோகங்களை இராஜயோகமென்றும் அனேக உபநிஷதங்களிலும்' யோக சூத்திரங்களிலும் ஆன்றோர் வெளிப்படுத்தி யிருக்கிறார்கள். மேல் கூறப்பட்ட பண்டு வழிகளுள் எம்மார்கத்திலும் சம்பந்த மில்லாது சொற்பனக் கற்பனயோகமாக இம்மெய்வழி அனுபவங்களிருக்கின்றன. இதற்கு மெய் இராஜயோகமென்றும் வெறும் பெயரும் கொடுக்கப்பட்டிருக்கிறது. பழயயோக சூத்திரங்களிலும் சங்கற்ப நிரோதயோகம், சமாதியோக முதலியவைகளையே, சித்தர்கள் பின்பற்றியதாக கூறப்பட்டிருக்கிறது. இந்துமத புராதனமகத்தான தத்துவ கலைகளனைத்தையும் சுவாமி விவேகானந்தர் "பதஞ்சலியோக சூத்திரம், கபிலர் சாங்கிய சூத்திரம், சங்கரர் வேதாந்த சூத்திரம்" இவைகளுக்கு பாஷியம்செய்து ஆங்கிலத்தில் வெளியிட்டிருக்கிறார். அவைகள் இராஜயோகம், ஞானயோகம், வேதாந்த இரகசியம், அருள்மொழிகள் முதலியவைகளில், பரமாணும் அமர்ந்துவிடாய் தீரும் வண்ணம்ஞான கற்பதருவாய் வியாபித்திருக்கிறது.

இவ்வாறுற்ற அகண்ட சமுத்திரத்தில் ஓர் சிறு துரும்பு போல் மெய்வழி நூல் மெய் இராஜயோகம் கூறுவதை அறிஞர் உலகம் ஆராய்வது அவசியமாகிறது. அதாவது "சாகும் பழக்கமே மெய் இராஜயோகமாம் சற்றும் சாவை யறியாமல் சாவது யோகமல்லவாம் மனித உடல் கூறு தொகுதியில் சாகும் பயம்கொண்டது எந்தகூறு? அது புத்தி விருத்தி யன்றி வேறாக யிருக்கமுடியாது. அப்படி பயப்பட்டது தினம் தினம் சாகத்தைரியங்கொள்ளுமா? அது சாவை அறிந்துவிட்டால் மறுபடியும் ஏன் சாகப்பழகவேண்டும்? பழய சுருதிகள் திருசியம் சர்வத்திலும் ஒரு அணுகூட சாவதும் பிழைப்பதுமில்லையென்றே சாற்றியிருக்கின்றன. ஆதலால் மெய்வழியோகம் ஒன்றிலும் சம்பந்தப்படாத சொற்

பனு கற்பனுயோகமென்று சொல்வதில் என்ன ஆட்சேப மிருக்கிறது ?" மேலும் மெய்வழியோகம் சொல்லுகிறதை, கேளுங்கள், "உயிரைப்பிரிப்பதே யோகம், உயிர் உடலைப் பிரியாமலொட்டலோயோகம்" என்கிறது. உடலிலிருந்து உயிரைப் பிரித்து சிரக்குகையில் பந்தனம் செய்தால் சிரம் உட லுக்கு வேருய்விடுமா ? அல்லது சிரக்குகையிலுள்ள நாத சொரூபத்துடன் உயிரைச்சேர்த்து விட்டால் நாதசொரூப உயிர், சிரம் சேர்ந்த உடலைத்தாண்டி வெளி நாதத்துடன் கலந்து ஆகாயத்தில் மிதக்கும் பலூன்மாதிரி மிதந்து கொண் டிருக்குமோ ? வெளிநாத ரூபத்திலிருக்கும்போது உயிர் சாவ தும் உடலில் மறுபடி சம்பந்தப்படும்போது பிழைப்பதும் தான் செத்து பழகும் சயன்ஸோ ? நல்ல நவீன சொற்பன வழியாயிருக்கிறது இம் மெய்வழி. இராஜயோகம். புராதன குப்த நூற்களிலும் சரீரக்கிரமத்தில் வெளி ஆகிருதி ஸ்தூலம் என்றும் அதனினும் உள்ளானது லிங்கம் என்றும் அதனினும் உள்ளானது காரண சரீரமென்றும், அது சைதன்னியத்தின் சாயல் என்றும், அச்சைதன்யம் மாறுகிறதில்லை என்றும் மற்றச் சரீரங்கள் மாறுந் தன்மையுடையன வென்றும் கூறப் பட்டிருக்கிறது. மெய்வழியார் கூற்றுப்படி வெளி ஒளி வடிவம் அதாவது பரமாகாய சப்தவடிவம் என்பது ஒன்றுளது என்பதும், அந்த வடிவமாக மனிதனின் உயிர் ஆய்விட வேண்டுமென்பதும் மெய்யாகாது. எப்படி யென்ருல் சகல ஜீவர்களுக்கும் சப்த குணங்களுண்டு. அந்த சப்த குணங்களி லிருந்தே சகல மறைகளும் சங்கீதகலைகளும், பிராண இயக் கங்களும் நடைபெறுகின்றன. இவைகளனைத்தையும் அறிவு சம்பந்தப்பட்ட விஞ்ஞானம் அனுபவிக்கிறதே தவிர மறைகள், சங்கித கலைகள், பிராண இயக்கங்கள், விஞ்ஞான மின்றி தனக்குத்தானே உணர்ந்து அனுபவிக்கிறதில்லை என்பதையும் B. A. படிக்காத சாதாரண மனிதனும் அனுபவ மூற்றும்

விஞ்ஞானத்தைச் சார்ந்தது தான் என்பதையும் உணருவான். அவ்விஞ்ஞானமாகிய புத்தி விருத்தியும் நாதவடிவுமாகாது. என் எனில் அது சர்வ நாதானு பவங்களையும் அனுபவிப்பதால் என்பது மாகும். அந்த நாத வடிவையும் அவ்வடிவான உயிரையும் தான் மெய்வழி இராஜயோகம் சாகாக் கால்வே காத்தலே யென்று கூறுகிறது. சப்தம் எப்போதும் சாகிற தில்லை. உயிர் எப்போதும் வேகிறதில்லை. ஸ்தூல சரீரம் தான் தகிக்கப்படுகிறது என்னும் இந்த நுட்பம் சர்வஜனங்களுக்கும் தெரிந்தேயிருக்கிறது. இது தெரிந்து விட்டால் ஜீவன் முக்தர்களாய் விடலாமோ? அப்படியானல் மனித வர்க்கத்தினர் முற்றும் முக்தர்களே யாவார்கள். இவைகளெல்லாம் முக்தி மார்க்கமாகாது. பொற்றேகமாகிய நாத உடலடைந்ததைஅனு பவிக்கும் அவ்வுடலுக்குச் சம்பந்த மில்லாத விஞ்ஞான விருத்திக்கே ஞானம் வேண்டியிருக்கிறது. அவ்விருத்தியோ நாதம், உயிர், உடல் முதலிய வற்றைப்போல் ஜடவஸ்துவாகும். சைதன்யமாகிய பிர்மத்தின் சம்பந்தத்தால் அறிவின் வாயிலாய் சமஸ்கார கூறுகள் உருவெளியாகும் போது புத்திபோல் நடிக்கிறது. அந்நடனக் கர்த்தாவான அறிவு தன் சொரூபத்தையடையும் போது விழிப்பை யடைகிறது. இம்மார்க்கத்தை யின் பற்றுவது தான் மெய்மார்க்கமாகும். தன் சொரூபத்தை யடைந்தனுபவித்தலே மெய்ஞானமாகும். அம்மெய் வழியை விட்டுவிட்டு அங்கமதில் முதலினுநித்தபொருள் எது? ஆருயிர் நிலைத்தது எங்கே? பாற்கடல் மால் பள்ளியறை ஒருபொருள் இவைகள் எங்கே? சத்த முதலில் பிறந்து வந்ததெங்கே? மேதினியில் பஞ்சபூதம் கலந்த நிலையெங்கே? அந்தர் முகப் பார்வை அகக்கண்ணிருந்த தெங்கே? இருதயத்தில் முச்சுடர் முன்னடி நிலையெங்கே? பிண்டமதிலே பெழுகா எழுத்திருந்ததெங்கே? வயது பத்து என்றுமுள கன்னி நின்ற தெங்கே? விந்ததினில் நாதம் நின்று விளங்கும் நிலையெங்கே?

வீசிவரும் வாசியுட னிலைப்பிடமுமெங்கே? வந்து வந்து போன முந்த நாள்களெல்லாமெங்கே? வானில் வரும் ரவி மதியி னிருப்பிடமுமெங்கே? தலை காலும் கால்மேலானதுவு மெங்கே? சாகாதக்கால் வேகாத்தலையதுவுமெங்கே? நிழல் சாயா மெய்யுடம்பு இப்பொய்யுடலில் எங்கே? தன்னைத் தானறியும் திருத்தலமதுவு மெங்கே? அடிநடுவு முடியாகி நின்றுலகப் பொய்யில் அடிமுடியு நடுவாகி நின்றமெய்யு மெங்கே? என்பனபோன்ற வினவிடுத்து அந்த அனுபவங் களை யடைந்து விடுவதால் பரிபூர்ணஞானமாய் விட்டதாக கூறுகிறார்கள். அந்நிலை மெய்யாகாது. ஏனெனில் அனுபவம் சர்வமும் அனுபவிப்பதை அறியும் அதீத ஆத்மாவை அடை யாத காலேயாகும். பிரஞ்ஞா தீத அவஸ்தையே சம்பூர்ண ஞான நிலையாகும். அவ்வாறு ஞான நிலையனுபவங்களை கீழே எடுத்துக்காட்டுகிறோம். அறிஞர் உய்த்துணர்ந்து மெய்வழியை பின்பற்றுவார்களாக.

1. ஆத்மாவின் காரியமாகிய ஆகாயம் ஆத்மாவை யன்றி சம்பவியாது. காரியமான ஆகாயத்திற்கு பூரணத்துவம் சம்பவிப்பதில்லை.

2. எப்படி குமிழியின் நாசத்தினால் ஜலத்தின் நாசம் ஒருபோது முண்டாகிறதில்லையோ, அதுபோல் இப்பிரபஞ் சத்தின் திருஷ்டிநாசத்தினால் இவ்வாத்மாவுக்கு நாசமுண் டாகிறதில்லை.

3. நாநாவித கும்பங்களில் எப்படி ஒரே ஆகாயம் வசிக் கின்றதோ அதுபோல் நாநாவித தேகங்களில் ஆத்மாவாகிய யான் ஒருவனே வசிக்கின்றேன்.

4. எப்படி ஆகாயம் கும்பங்களில் நாநாவிதத் தன்மை யையடைகிறதில்லையோ, அதுபோல் நான் தேகங்களில் நாநா விதத் தன்மையை யடைவதில்லை.

5. ஜடமா யிருத்தலால் தேகம்யானல்ல, பூதகாரியமா யிருத்தலால் இந்திரியம்யானல்ல, அனேகமா யிருத்தலால் பிராணன் யானல்ல, சலனமுடையதா யிருத்தலால் மனம் யானல்ல, விகாரமுடையதா யிருத்தலால் புத்தியும் யானல்ல, தேகேந்திரிய பிராண மனோபுத்தி அஞ்ஞானங்களையும் அகங்காரத்தினையும் விளக்கும் பிரகாசத்தினையுடையதாய் யான் சித்தா யிருக்கின்றேன்.

6. உபாதியாகிய நீலம், சிகப்பு முதலியவற்றால் எப்படி ஸ்படிகம் பற்றப்படுகிறதில்லையோ அப்படி ஆத்மாவாகிய யான் கோசங்களினாலும் காமமுதலிய எல்லாவற்றாலும் பற்றப்படுகிறதில்லை.

7. எப்படி இந்தசொற்பனத்திலுள்ள தேகத்தினைவிட்டு சாக்கிரத் தேகத்தினைக் காண்கின்றானோ அதுபோல, ஜாக்கிர தேகத்தினைவிட்ட மெஞ்ஞானி ஆத்மாவினைக் காண்கின்றான். விழித்தவனுக்கு எப்படி சொற்பனபோகத்தில் இச்சையிருப்பதில்லையோ அதுபோல, ஞானிக்கு அசத்தான சுவர்க்கபோகத்தில் இச்சை யிருப்பதில்லை.

8. உப்பின் தடிப்பு எப்படி ஜலத்தின் சம்பந்தத்தால் ஜலமாகின்றதோ அதுபோல புத்தியானது சுயாத்ம யோகத்தினால் ஆத்மாவேயாகின்றது. எப்படி ஜலப்பிரதிபிம்ப சூரியன் ஜலத்தில் பிம்பசூரியனைவிட வேறுபோல் தோன்றுகிறானோ அதுபோல் புத்தியில் ஆத்மாவின் சாயை ஆத்மாவைவிட வேறுபோல் தோன்றுகிறது. பிம்பமின்றி ஜலத்தில் பிரதிபிம்பம் எப்படியுண்டாகும்? அதுபோல் ஆத்மாவின்றி புத்தியில் ஆத்மாவின் சாயையுண்டாகாது. பிரதிபிம்பத்தின் அசைவு முதலியன பிம்பத்திற்கு எப்படி இல்லையோ அது போல் சித்சாயை யிடத் துள்ளகர்த்தா தன்மை ஆத்மாவுக்கில்லை. ஜலத்தின் குளிர்ச்சி முதலியன எப்படி ஜல பிரதிபிம்பத்தைத் தீண்டாதோ அதுபோல் புத்தியின் காம முதலிய

விகாரங்கள் நித்சாயையையும் தீண்டாது. ஜலத்திலுள்ள பிரதி பிம்ப சூரியனையும், ஜலத்தினையும், அலைகளையும் எப்படி பிம்ப சூரியன் விளக்கிக்கொண்டு விளங்குகிறானோ அதுபோல, இவ்வாத்மா தனது சாயையினையும், புத்தியினையும், புத்தியின் கர்த்திருத் வாதிகளையும் விளக்கிக்கொண்டு விளங்குகின்றது.

9. எல்லாவற்றையும் விளக்கும் சூரியன் விளக்கப்படுவனவற்றால் தூஷிக்கப்படுகிறதில்லை. அதுபோல் சூரியன் முதலிய சர்வ திருசியங்களையும் விளக்கும் ஆத்மா விளக்கப்படுவனவாகிய எல்லாவற்றாலும் தூஷிக்கப்படுகிறதில்லை.

10. தாம்பிரத்தில் கற்பிக்கப்பட்ட தெய்வ முதலியன எப்படி தாம்பிரத்தினும் வேறுபோல் விளங்குகின்றனவோ அதுபோல், ஆத்மாவிடத்து கற்பிக்கப்பட்ட இவ்வுலகம் ஆத்மாவைவிட வேறாக விளங்குகிறது. கற்பிக்கப்பட்ட தெய்வ முதலியன சொரூபத்தில் தாம்பிரத்திற்கு அன்னியமில்லையோ அதுபோல் உலகும் ஆத்ம சொரூபமேயாகிறது.

11. கற்பிதமான சர்ப்பம் பழுதையி னிருப்பினால் சத்தியம்போல் தோற்றுகிறது. அதுபோல கற்பிதமான ஜகத்து ஆத்மாவினிருப்பால் சத்தியம்போல் விளங்குகிறது. விவேகத்தால் கற்பிதமான பாம்பு இல்லாததுபோய் பழுதை மிஞ்சுகிறது. அதுபோல் விவேகவிருத்தியின் ஆராய்ச்சியால் கற்பித ஜகமின்றிய ஆத்மாவே மிஞ்சுகிறது. ஸ்படிகத்தில் சிகப்பும், ஆகாயத்தில் நீலத்தன்மையும் எப்படியோ அதுபோல், அத்வீதியமாகிய ஆத்மாவில் இந்த ஜகத்து உண்மைபோல் தோற்றுகின்றது. எப்படி ஸ்படிகத்தில் சிகப்பும் ஆகாயத்தில் நீலத்தன்மையும் பொய்யோ அதுபோல், ஏக அத்வயமாகிய என்னிடத்து இவ்வுலகு மித்தையாம்.

12. மூடபுத்தியானவன் ஜீவ ஈஸ்வர முதலியனவாக பேதத்தை காண்கிறான், பேதமின்றிய நிர்விசேஷமான இவ்வாத்மாவில் இப்பேதம் எப்படியுண்டாகும்? சிவனே சதா

ஜீவன். ஜீவனே சதாசிவன். இவ்விரண்டின் ஐக்கியத்தை எவன் அறிகின்றானோ அவன் ஆத்மாவையுணர்ந்தவன். எப்படி திருடன்போன்ற விகாரம் கம்பத்திற்கு ஓரிடத்துமில்லையோ அதுபோல பிரபஞ்சத்தினாலுண்டாய விகாரம் நிர்விகாரமாகிய ஆத்மாவிற்கில்லை. கம்பம் அறியபட்டபோது திருடன் ஏது? திருடனில்லாதபோது பயம் ஏது? அதுபோல் இவ்வாத்மா அறியப்பட்டபோது உலகமேது? உலகமில்லாத போது பயமேது? பயமற்றபோது மரித்துப்பிழைத்தல் நாதவடிவாதல் மார்கண்டனாதல் முதலியவற்றிற்கு அவசியமேது?

13. எந்தப் பிர்மத்தில் இத்தேக மூன்றும் சத்தியம் போல் தோற்றுகின்றதோ அந்த தேக மூன்றினும் வேறான பரபிர்மமேயான். எந்த பிரத்தியகாத்மாவில் ஜாக்கிர சொற்பன முதலிய மூன்றும் சத்தியம்போல் தோன்றுகின்றதோ அந்த ஜாக்கிர முதலியவற்றின் சாக்ஷியான பிரத்தியேகாத்மாவேயான்.

என்பனபோன்ற சுயானுபூதிகளை சுருதிகள் அனுபவ வாயிலாய் எடுத்துகாட்டுகின்றன. யஜுர் வேதத்தின் அகம் பிர்மாஸ்மி என்னும் மகா வாக்கியத்தின் தாத்பரியமுமிதுவேயாகும். இப்பிரகாரம் "எதுமெய்வழி? என்பதை எடுத்துகாட்டுமுகத்தான் மெய்ஞ்ஞானபோதத்தை சுருக்கமாகவும் அறிஞர் உடன் உணரத்தக்கதாகவும் பொருளடக்கி விஷயம் விளக்கப்பட்டிருக்கிறது.

இங்ஙனம்,

**சாது - சுப்பையா,**
காரியதரிசி, வேதாந்த விசாரணைச்சங்கம்,
விஜயபுரம்—திருவாரூர்.

# மெய்வழி மாணவர் அநுபவம்

இவ்வுலகில் அனேக மார்க்கங்கள் தோன்றி மறைந்து வருகின்றன. புத்தர் வழி ஒருகால் உலகின் முக்கால் பங்கு வியாபித்திருந்தது. ராஜாராம் மோகன்ராய் அவர்கள் நிறுவிய பிர்ம சமாஜம் பல அறிஞர்களாலும் பார்லிமெண்ட் மெம்பர்களுள்பட மேல் நாட்டறிஞர் பலராலும் ஆதரிக்கப்பட்டிருந்தது. அன்னிபெசன்டம்மையாரால் திவ்யஞான சபை ஸ்தாபிக்கப்பட்டு இன்றும் உலகமுற்றும் அனேக கிளைச்சபைகளும் அரியபெரிய அறிவாளிகளும் உறுப்பினர்களாக யிருந்தும் குப்த சாஸ்திரத்தையே மிகு எளிதாய் உலகினர்க்கு போதித்தும் வருகிறார்கள். சுவாமி தயாநந்த சாஸ்வதி அவர்களால் நிறுவப்பட்ட ஆரிய சமாஜமும் லாலாலஜபதிராய் சிரத்தானந்தர் போன்ற அறிஞர்களால் பின்பற்றப்பட்டு மிருக்கிறது. நமது அரசபிரான் பின்பற்றும் புரோட்டஸ்டாண்டு மதத்தையும் நிராகரிக்கும் பூதபௌதீக ஜட தத்துவவாதிகளும் அம்மேனாட்டிலேயே இப்போதும் இருந்தே வருகிறார்கள். அரசரோ, பார்லிமெண்ட் மெம்பரோ சர்வாதிகாரியோ, அறிவில் பல துறைகளில் மேம்பாடுடையாரோ, போலீஸ், கோர்ட்டு உத்தியோகஸ்தர்களோ, பெரும்பட்ட தாரிகளோ, ஒரு துறையிலிறங்கிவிட்டதற்காக உலகினர் அனைவரும் இறங்கிவிட வேண்டுமென்றோ, அவ்வழிகளை மறுக்ககூடாதென்றோ வழக்கத்திலிருந்ததில்லை. அப்படி கட்டாயப்படுத்துவதும் மனிதன் புத்தியின் சுயேச்சையைப் பறிப்பதுமாகும் உலகில் தோன்றி மறைந்தும், இருந்தும்வரும் சகல சமய மார்க்கங்களும் பழைய அபௌர்ஷேய தத்துவமாகிய அத்

வைதம், துவைதம், விசிஷ்டாத்வைதத்தை அஸ்திவாரமாகக் கொண்டே நிருவப்பட்டிருந்தனவேயன்றி அவற்றிற் கன்னியமாக ஒன்றும் அமைக்கப்படவில்லை. இதில் நாம் சார்ந்த வழி சொருப அத்வைதமாகும். மேல்கண்ட புராதன இந்து மதத்தைச்சேர்ந்த எவ்வழியிலும் சம்பந்தமில்லாத ஒருவழியை இந்து மதத்தின் பூரணமார்க்கமென்றும், அதை சகலரும் பின் பற்றவேண்டும் என்றும் அழைக்கும் ஒருநூல் நமக்குகிடைத்த தால் அவ்வழியை ஆராயநேரிட்டது. அம்மெய் வழியார் முகமது நபிகள் நாயகம் (சல்) அவர்கள் மரபில்தோன்றியவ றென்றும், அம்மார்க்கத்திலே சரியை, கிரியை, யோகம், ஞானம், போன்ற வழிகளில் யோகமார்க்கத்தை தனது குரீஸ்வாரலே அடையப்பெற்று முகமதிய மார்க்கத்திற்கு தானடைந்த அடைவுதான் மெய் மார்க்கமென்றும் பயன் தரும் வழியென்றும் இப்போது முகமதியர் அவலம்பிக்கும் அறை பயனற்றது என்றும் பெரும்பாலும் தமது மெய் வழி நூல் மலர்களில் திருவாய்மலர்ந்தருளப் பட்டிருக்கிறது. அதோடு நில்லாது பரம்பரையாய் இந்துக்கள் அவலம்பித்து வரும் வேதகிரேயசாகிய வேதத்தத்துவங்களையும் பயனற்றது என்றும் தம் வழியைப்பின்பற்றல் தான் சுயானுபூதி அடை வென்றும் அந்நூலில் சாற்றியிருப்பதை வேதத்தின் நுட் பொருளறியாத பல இந்துமத அறிஞர்கள் அப்பத்தநிகளை ஆமோதித்து இதர இந்து சகோதரர்களையும் அவ்வழியைச் சாரும்படி அழைக்கிறார்கள். தெரிந்தோ தெரியாமலோ இந்து அறிஞர்கள் அந்நூல் வாயிலாய் அழைப்பவர்களுக்கும் அழைப்பில் சம்பந்தப்படுகிறவர்களுக்கும் அபௌர்ஷேய மெய்வழி ஏற்கனவே யிருந்துகொண்டிருக்கிறது. அதை யும் பகுத்தறிவாலுணர்ந்து பாருங்கள் என்றே எமது சங்க காரியதரிசியால் இச்சிறுநூல் வெளியிடப்பட்டிருக்கிறது. காமில் நாயகம் மகரிஷி ஆண்டகை அவர்கள் நூலின் போக்

கையும் சிறிது இங்கு எடுத்துக்காட்டுகிறேன். "இனியென் செய்வோ மென்றுளமேங்கி அனியாய மாணமேயாகு மென்றுருகி ஒயா சிந்தையொழிந்தது மறியேன் மாயா முன்னே மவுத்திட மறியேன்" என்றும், "மாமிலென்னை யிருத்துமே ஞானக்கங்கை யாழியிற்சேர்க்கவும் பண்ணினேன் பனிரெண்ரெண்டாண்டாங்கே பாய்ந்தகோடி நிலைக்கவும்," என்றும் "அரக்கர் வானவர் மனுக்கள் யாவரும் அலைந்தலைந் தின்னங்காணுரு ஆதிநாயக தேவதேவனை அடிமை கண்டு கலந்தநாள்" என்றும், "ஆகும் நாளல்லவோ தத்வமசியாகுமே சோகம்ச நாள் சிந்தையொன்றிற் சிவாயமஞ்சையும் சேவை கண்டு கலந்தநாள் தேசிகனுபதேச மேவிட சேரு மகம் பிர் மாஸ்மியே" என்றும், "பராபரமானநிராதாரமாகிய ஆதாரத்தி னுள்ளே அங்க ஆறடி குச்சுக்குள் கூறுதவகூரர்ந்தேர்வதுன் கல்புக்குள்ளே" என்றும், "திருத்தமுளோன் முளவின்படி பொருத்தி நின்று தினமாறு ருண்டேற சேருங்கற்பம், சேரு மடா கொழுமுனையே வாசிமுனை, சொன்னபடி சூக்குமமே தோன்றிவிடும், தோன்றிவிடும் ஆயிரத்தெட்டண்டமெலாம் ஜகஜோதி கவனமணி குளிகைவேதம்," என்றும், "போச்சுது பொல்லாங்கெல்லாம், புகழ்சுழி நாதவிட்டால், சாட்சியின் துணையுமில்லா சர்வஞ்ஞன் துணையுமானேன்" என்றும், "நம்பியே தன்னுயிர் தற்கொலைசெய்வான், நமசிவ இருப்பறி யான், தம்பிரான் தவசிலகம்பாடுஎன்பான், சைவனெனச் சொல்வான்" என்றும், "மின்னிய நன்னுதவிந்து அன்னையின் கருக்குழியில், மன்னிய சுரோணிதத்துடன், எண்ணமோடிப் பாயும்போது, வண்ணி, தண்ணி, காற்றுடனே காணுமண்ணு காயமெண்ணமே" என்றும், "வெள்ளை கருப்பாமோ, விஷந் தால் இருளாமோ, விள்ளாதே வேகாத்தலை, சூக்கும முடம் பாமோ, சொல்லவிளங்காதே, சாக்களவே தான் சாகாக் கால்" என்றும், "காட்டும் குருவன்றி காணுதனதுடம்பில்

பூட்டுடைய மாட்டாதேபோம்'' என்றும், 'தெறிவயிரு விலாப்புடைக்க யள்ளிவைத்துத் தின்றுவிட்டு நானில்லையது யிதென்றும், அறிவறியான ககது பிர்மாஸ்மியென்று, அடித்த லறி யழுதாலுமறியான்றானே தானான தனையறிதல் தனக் காதாரத் தலைவனாக் கண்டறிதலென்றும் பாடமோதிக், கோனான வாத்மாவைக் கேட்டல் சொல்லல், குறைமனத் தால் நினைத்திடுமிறி தொழில் மூன்றாலே, தேனான தன்னைத் தானறிந்தே னென்பான், தலைவனைக்கண்டறிதலு மற்றதுவே யென்பான், ஈனனிவன் கெடுவதுடனிவன் சொல்நம்பி, இருப்பவர்க்கு மிவன் கதிதானென்று காணே'' என்றும் வேதாந்திகளைப் புறக்கணித்தும், துவைதம், அத்வைதம் இவை களின் நிலையுணாாது எல்லாம் ஒன்றாக்கி குழப்பியும், தனது போக்குக்கு மெய்வழியென்றும் கூறப்பட்டிருக்கிறது. புரா தன வழி அனுபூதியற்றவை, தம்வழி அனுபவமுற்றவை யென்றும் கூறுகிறார்கள். அநுபவமில்லாத ஜீவவர்க்கம் ஒன்றுமே யில்லையென்பது நமது அனுபவம். தன்னிருப் பின் அநுபவமில்லாது யாதொரு ஜீவனும் தனதுசெயலின் அனுபவத்தை அடைவதில்லை. சாகாம், சொற்பனம், சுழுத்தி துரியம் முதலிய சகல அவஸ்தைகளையும் தன்னிலையநுபவ மில்லாது முன்னிலையனுபவம் அடைவு நிகழ்வதற்கில்லை, ஓர் கிருமியின் இன்ப அனுபவத்தைவிட எந்தஸ்திதியில் மெய்வழி அனுபவம் உயர்ந்ததென்பது எடுத்துகாட்டினல் மேன்மையா யிருக்கும். இக்காரணங்களை எல்லாம் நமக்கு விளக்கும்படி காமீல்நாயகம் மகரிஷி ஆண்டவர்கள் சன்னிதானத்திற்கு அடி யில் கண்டகடிதம் ஒன்று என்னல் எழுதப்பட்டது.

கடிதம்

திருப்பத்தூர் மெய்வழி சபாநாயகம் ஸ்ரீலஸ்ரீ
மகரிஷி மார்க்கநாத ஆண்டகையார் அவர்கள்

திவ்விய சமுகத்திற்கு, விஜயபுரம் நெல் வியாபாரம் பொ. சவுந்தரராஜ பிள்ளை வணக்கமாய் தெரிவித்துக் கொள்வது :

1. விஜயபுரம் வேதாந்த விசாரணைச் சங்கத் தலைவர் என்ற முறையில் இக்கடிதம் எழுதியிருக்கிறேன். நமது சங்கத்திற்கு தங்களால் பாடப்பெற்ற 'மெய்வழி நூல்' என்ற ஓர் நூல் கிடைத்தது. வழக்கப்படி அந்நூலை சங்கத்தாரால் ஆராய்ச்சி செய்யப்பட்டது.

2. ஷ்டி நூலின் கருத்துகளுக்கும், நான்முக அபிப்பிராயம் கொள்கை இவைகளுக்கும் யாதொரு சம்பந்தமேயில்லாதிருக்கிறது. அம்மெய்வழி நூல் 19லும் புகட்டப்பட்டிருப்பவைகள் வேதாந்தமென்றும், சித்தாந்தமென்றும், யோகமென்றும், ஞானமென்றும் எல்லாம் ஒன்றாக்கி குழப்பி புகட்டப்பட்டிருக்கிறது. முன்னோர்கள் கண்ட அனுபவ உண்மையாகிய மெஞ்ஞானத்திற்கும், அம்மெய்வழி நூலில் கூறப்பட்டிருக்கும் ஞானமென்ற கூற்றிற்கும் யாதொரு சம்பந்தமுமில்லையென்றும் தெரிகிறது.

3. சர்வ சமயக் கொள்கைகளும் இம்மெய்வழி நூலிலிருப்பதாக கூறியிருப்பதையும் மறுக்கிறேன். இவ்விந்தியாவில் பாரம்பரையாய் இருந்துவரும் மெஞ்ஞான சுருதிகளில் கண்ட அனுபவஞானம் இம்மெய்வழி நூலில் இல்லாதிருப்பதையும் எடுத்துக் காட்டுகிறேன்.

4. மரித்துப் பிறத்தல், நாதஉடல், பிறவாமை முதலிய அனுபவங்களையடைவதும் உண்மை நிலையன்று என்பதும், அவ்வடைபு பிராந்திதானென்றும், பிரத்தியக்ஷப் பிரமாண தத்துவப் பிரமாண மூலமாய் சமுகம் தெரிவிக்கவும் சித்தமாயிருக்கிறேன்.

5. அம்மெய்வழி நூல் ஞானசிகாமல்லவென்பதை நிரூபிக்கும் 4 பாகங் கொண்ட ஓர் கட்டுரையும் சங்கத்தாரால் பிரசுரத்திற்கு நிறுவப்பட்டிருக்கிறது.

6. நமது சந்தேகங்களைப் போக்க சபாநாயகம் அவர்கள் கிருபை கூர்ந்தால் பாகம் பாகமாக அனுப்பத் தயாராயிருக்கிறேன்.

தங்கள் மேலான பதிலை எதிர்பார்க்கும்
(Signed) P. Soundararaja Pillai.

எனது பணிவான கடிதத்திற்கு நாயகமவர்களிடமிருந்து யாதொரு பதிலும் கிடைக்கப்பெற்றிலேன். ஆனால் நமக்கும் மெய்வழி நூலுக்கும் சம்பந்தமில்லாத அடியில் கண்ட பல அன்பர்கள் கடிதம் எழுதியிருக்கிறார்கள்.

1. மதுரை எ. சுந்தரம் பிள்ளை பி. எ. 2. மானமதுரை பஞ்சாயத் போர்டு பிரசிடெண்ட் எம். மஸ்தான்கனி அம்பலம் 3. திருப்பாச்சேத்தி சு. கண்ணுசாமி பிள்ளை 4. ராம கரு சுப்பிரமணியஞ் செட்டியார் 5. திருப்பாச்சேத்தி பஞ்சாயத் போர்ட் பிரசிடெண்ட் ச. சுப்பிரமணிய பிள்ளை 6. மெய்வழிச் சபை அமைச்சர் எம். மாசிலாமணி பிள்ளை. 7. மதுரை ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேசர் தேவஸ்தானம் கார்டன் சூப்ரவைசரான பொ. கருப்பையாக்கோன். 8 திருப்பாச்சேத்தியிலிருக்கும் மூக்கன் குடும்பன் மகன் ஆண்டிகுடும்பன் 9. எ. வி. தியாகராஜா பங்கஜ விலாஸ் தேனாம்பேட்டை மதராஸ் 10 அறுப்புக்கோட்டை ரோடு மெய்வழிச்சாலை அ. இராமசாமிசெட்டியார் 11. கே. சி. கன்னியப்ப ஆச்சாரியார் காண்ட் செக்ஷன் ஹைகோர்ட் மதராஸ் 12. சிவகங்கை பஞ்சாயத் கோர்ட் மெம்பர் தர்க்கசபை காரியதரிசி (பெயர் விளக்கமாய் தெரியவில்லை) இவர்களனைவரும் மெய்வழியடைந்த அனுபூதிமான்

களாகும். இந்நண்பர்கள் நமக்கு அறிவுறுத்தல், பயமுறுத்தல், எச்சரிக்கை அவதூறு இவைகளடங்கிய கடிதங்களை யனுப்பியிருக்கிறார்கள். இவர்களிலேயே இரண்டொருவர் தங்கள் கடிதங்களின் தொடர்பாக இன்னும் இக்கைங்கர்யத்தை நடத்தியே வருகின்றனர். கடிதங்களில் குறிப்பிட்டுள்ளபடி இவர்கள் கைவரப்பெற்றுள்ள மெய்வழி அனுபவங்களை அறிஞர் உணருமாறு எடுத்துக் காட்டுகிறோம்.

1—மவர்: வேதாந்த அனுபவம் இப்ப கைவரப்பெற்றவர் என்று கூறி கிணற்றுத் தவளைக் கதை ஒன்றும் கூறுகிறார். அந்தக் கதை சுவாமி விவேகாநந்தர் சிகாகோவில் கூடிய உலக மகா சபையில் முதல் நாள் பிரசங்கத்தில் சொன்ன கதையென்பது நமக்கு வெகு காலத்திற்கு முன்பே தெரியும். ஓர் மாசற்ற நிலைக்கண்ணாடியின் முன்னால் மனிதன் நின்றால் மனித உருவம் தோற்றும். கழுதை நின்றாலும் கழுதை உருவம் தோற்றுவது சகஜம் என்கிறார். மனிதன் கண்ணாடியில் தன் சாயலை தானல்ல சாயலென்று உணருகிறான். கழுதைக்கு கண்ணாடியில் தெரிவது சாயலாகிய பொய் தோற்றமென்று தெரிவதில்லை. இன்னொரு மெய்கழுதையாகவே பாவிக்கும். மெய்யாகப் பார்க்கும் கழுதை நிலை உண்மை நிலையா? பொய் சாயலென்று உணரும் மனிதன் உணர்வு நிலை உண்மை நிலையா? என்பதை நண்பரையே திருப்பிக் கேட்கிறோம். விடை யளிப்பாராக.

2—மவர்: தாங்கள் ஒரு வியாபாரி யென்றும், மெய்வழி நூலை கண்டித்தது மதியீனமென்றும், நரிவாலைக் கொண்டு கடலாழம் பார்த்ததுபோலுமிருக்கிறதென்றும், ஆராய்ச்சிக்கும் அனுபவத்திற்கும் சம்பந்தமில்லையென்றும், ஆகமவிதங்களறிவார் பாமறியார், யோகமோடுறங்குபவரே பாமுணர்ந்தோர் என்றும், உலகமுற்றும் இரண்டடியாலளந்து

மேலும் எம்மனோர் சிரோபீட மீது சிகரம் வைத்த மூன்று அடியையுடைய பரமபிதா அனந்தானந்த கோடி சூரியப்பிர காச அண்டகை நாயகமவர்களின் சீடர்களான எம்மனோர் ஆயிரக்கணக்கான சிஷ்ய குழாங்களில் ஒருவரின் காலடி இரண்டிற்கும் தங்கள் கை பாகம் கொண்ட கட்டுரை எம்மாத் திரமென்றுணர்வீர்களாக என்றும் எழுதியிருக்கிறார். நமது கடிதத்திற்கும் இவருக்கும் யாதொரு சம்பந்தமில்லை. இருந் தாலும் இவர் ஆகமம் என்றால் இன்னது வேதம் என்றால் இன்னது வேதாந்தமென்றால் இன்னது யோகம், ஞானம், என்றால் இன்னவை என்பவைகளை தெரியாது குழம்பிய அனு பவத்தால் நமக்கு "ஆகம விதங்களறிவார்" என்ற பாட்டை எடுத்துக் காட்டுகிறார். நாம் ஆகமத்தைப்பற்றி எதும் குறிப் பிடவில்லை. என் விஷயமறியாது இப்படி உளறவேண்டும் நண்பரின் அனுபூதி இவ்வளவுதானோ ?

3—மவர்: "அ" என்ற அட்சரத்திற்கு உயிர் எழுத்து என்று பெயர் வந்ததற்குக் காரணமென்ன? அந்த எழுத்து நம்மிடம் எங்கிருக்கிறது? அதன் நிறம், குறி, வேலைதா னென்ன என்று பார்க்க திறமையில்லாத தங்களிடம் மெய் வழி நூல் கிடைத்திருப்பதானது, கத்தி தீட்டுகிற பரியாரி கையில் மாணிக்கல் (?) கிடைத்தால் அதன் பெருமையை உணராதும் தனது வேலைக்கும் இடந்தாதுபோலும் என்றும், குருட்டு ஆராய்ச்சியினால் தங்கள் மூளையை குளப்பிவிடாமல் "அ" என்ற அட்சரம் அண்டத்திலுள்ளதை பிண்டத்தில் கண்டு சாந்தமடைய பிரயாசைப்படுங்கள் என்று எழுதியிருக் கிறார். மெய்வழி வர்க்கத்தாருக்கு பரியாரியும், பரியாரியின் கைக்கத்தியும் விலக்குபோலும்! மாணிக்கம்போன்ற மெய் வழியை பரியாரியின் பணத்திற்கு விற்கலாமா? பக்குவிகளா கப் பார்த்துத் தேர்ந்ததல்லவா மெய்வழியை வினியோகிக்க

வேண்டும்? ஒலியை பிறருக்கு ஒலிக்காதுணர்த்த வரிவடிவம் மனிதனுல் சிருஷ்டிக்கப்பட்டது. அந்த அட்சரங்களுக்கு உயிர் என்றும் உயிரற்றது என்றும் மனிதனுல் சிருஷ்டிக்கப் பட்டதுதான் என்ற காரணம் இந்த இலக்கண வித்துவா னுக்கு ஏன் விளங்காமல் போய்விட்டது? அந்த அட்சரம் வரி வடிவங்களில் சம்பந்தப்படும்போது, மைக்குத்தக்கப்படி நிறம், குறி, வேலை எல்லாம் நம்மிருவரும் சம்பந்தமில்லாதநில் சம்பந்தப்படுத்தி நடத்திகொண்டிருப்பதும் தெரியவில்லையா? அண்டம் பிண்டமெல்லாம் ஒரு வியாபகமாகவல்லவோ இருக் கிறது. அதுபோல் "அ" அட்சரத்திற்கிருக்குர் சுழி, வால், கால், ஒன்றும் காணுமே? உம்மைப்போல் நம்மையும் இல் லாதவற்றை சிருஷ்டித்துக்கொள்ளும்படி சொல்லுகிறீரா ? நன்ருயிருக்கிறது. தங்கள் மெய்வழி அனுபூதி.

4—மவர்: தாங்கள் கற்றிருக்கும் கல்வியானது குரு வில்லா வித்தைபோலும், புருடனில்லாத மனைவிபோலும் என் றும் காருண்ய காமீலாகிய எங்கள் குலதிலக குரு பெருமான வர்களுக்கு அதிக மகோன்னத நிலைமை வாய்ந்த ஆயிரக் கணக்கான சிஷ்ய குழாங்கள் புடை சூழ ஸ்ரீராமபிரான், கண் ணபிரான், சுப்பிரமணியர், அகஸ்தியர், கொங்கணர், திருமூலர் இவர்களுடைய நூலுக்கும் அனுபவத்துக்கும் ஒத்த கைவல்ய அனுபவத்தை அனுபவித்து வருகின்ற நான் தாம் எங்கள் நாயகமவர்கள் பால் விடுத்த தாளுக்கு பதில் விடுத்தேன், விடுப்பேன் என்றும், பாவி, பாவி என்று ஒரு பாட்டையும் பாடிவிட்டு தங்களின் வீண் செருக்கையறுக்கும், ருமை, கரு. சுப்பிரமணியஞ் செட்டியார் என்று எழுதிவிட்டிருக்கிருர். ஒரு நூலைப் பார்த்து அதிலுள்ள குறைகளை எடுத்துக் காட்டி விளக்கும்படி கேட்டால் சம்பந்தமில்லாதவர் வாதுக்கிழுப்பது தான் செருக்கற்ற நிலையோ? ஸ்ரீராமன், கண்ணன் இவர்கள்

அத்வைதி, முருகன், துவைதி, அகஸ்தியர், கொங்கணர், திருமூலர், இவர்கள் சித்தயோகிகளாவார்கள், இவர்கள் நூல்களும் அனுபவங்களும் ஒக்க உள்ளது என்று கூறுவதிலிருந்து, இவரடைந்த ஞானனுபவ குழப்பத்தையே நாம் மெய்வழி நூலிலும் கண்டது. அதைத்தான் மகரிஷிக்கு நாம் விண்ணப்பித்துங்கொண்டது.

5—மவர்: ஈசனுடைய குஞ்சிதபாதத்தைக் கண்டு தெரிசனம் செய்திருக்கிறீரா வென்றும், உலகமுழுதும் 2 அடியாலளந்த கண்ணபிரானையே அடிமை வேலை பார்க்கும்படி செய்விக்கும் மேம்பாடுடைய பெம்மஞேர் சிரசிரி மீது தமது பொற்பாதம் சூடிய பரம பிதா நாயகமவர்களின் ஆயிரக்கணக்கான சீடர்களின் ஒருவரின் காலடிப்பொடிக்கும் ஒவ்வாத தங்கள் 4 பாகம் கொண்ட கட்டுரையும் ஒவ்வுமாவென்றும் நம்மிடம் நேரில் வந்து தெரிவித்துக்கொள்ளவும் என்றும், சைவ சமயத்தின் ஞானமாம் ஞானம் எல்லோருக்கும் எளிதில் கிடைக்கப்பெறுமா, ஆனதால் தேவாரம், திருவாசகம், அருள்பா, குருநேதை முதலிய நூல்களை யூன்றிப் பார்த்து பகவானுக்கும் சிவனடியாருக்கும் அன்பனுதமாறு களிகூர்ந்து கூறுகிறேன். விவாதமாவது லெட்டர் காஸ்பாண்டாவது? எம்மிடம் நேரில் என்றும் எழுதியிருக்கிறுர். அண்டமென்றும் பிண்டமென்றும் கூறும் அகண்டம் ஈஸ்வர உருவாயிற்றே. அவ்வகண்டத்தில் குஞ்சிதபாதமேது? தெரிசனமேது? இதுதான் வேதாந்தமோ? கண்ணன் உலகை 2 அடியாய் அளந்ததை எந்த நூலில் பார்த்தீர்கள்? வாமனன் என்ற ஒரு பிராமணச்சிறுவனல்லவோ அப்படி அளந்ததாய் புராணம் கூறுகிறது. சர்வ சமயசாரங்களும் உணராது மெய்வழி நூலைமட்டும் பார்த்துவிட்டு இப்படி குழப்பமடைந்திருக்கிறீர்கள். கண்ணன் என்ற கீதாசாரியன் மறைந்து

சுமார் 5000 சொச்சம் ஆண்டுகளாயிற்றே, அவரை இப்போது உங்கள் அடிமை வேலைக்கு எப்படி வரவழைக்கமுடியும்? கீதா தத்துவத்தின் ஓர் அணுவின் சார்பில்கூட நெருங்க பக்குவமற்ற நண்பர்தானு கண்ணனை பணியாளாக்கும் யோக்கியதையுடையவர்? நன்றாயிருக்கிறது. தங்கள் மெய்வழி அனுபவம். நாம் சைவசமயியென்று உமக்கு கடிதம் எழுதியதுண்டா? நாம் சொரூப அத்வைதியாதலால் தேவாரம், திருவாசகம், அருள்பா, குருகீதை முதலியவழிகள் நமக்கு பூர்வ பட்சமாகும். ஒருவர் நிலையை பூரணமாயுணராது உளறித் தள்ளிவிடுகிறீர்கள். கோபத்தின் கொடுமைபோலும்! பாவம்.

6—மவர்: மெய்வழிச் சபை அமைச்சர் மெய்வழி நூல் ஆராய்ச்சி குறிப்புகளை வெளியிடுமுன் அவை வீண் அவதூறுக்கும், பழிக்கும், துன்பத்துக்கும் இடந்தரா வண்ணம் ஆராய்ந்து உங்களுடைய கைமாறு கருதா உதவியில் தலையிடுமாறு கேட்டுக்கொள்ளுகிறேன் என்றும், கடிதத்தின்மூலம் தங்கள் ஐயப்பாடுகளை தீர்த்துக்கொள்ள முயற்சிப்பது எங்களுக்கு பொருந்தாதென்று தெரிந்துகொள்ளக் கடவீர் என்றும் தெரிவித்திருக்கிறர்—இவைகள் ஞாயவரம்பிற்குள் பட்டவை தான். ஆயினும் அவையின் அமைச்சருக்குள் பட்ட உறுப்பாளர்களுக்கு நமக்கு எடுத்துகாட்டிய அவதூறு, பழி, துன்பம், பயமுறுத்தல் இழிச்சொல் முதலிய பிரயோகங்கள் நமக்கு வந்த கடிதங்களில் நிரப்ப பட்டிருப்பது மெய்வழிச் சபையின் சட்ட உத்திரவோ? ஞாயமன்றம்புகும் காலம் அக் கடிதங்கள் விபரமாய் வெளிப்படுத்தப்படும்.

7—மவர்: மதுரை ஸ்ரீமீனாக்ஷி சுந்தரேசர் தேவஸ்தானம் கார்டன் சூப்ரவைசர் பொ. கருப்பையக்கோன், இவர் மனித ஜென்மம் எடுத்திருக்கிறேமென்ற நினைவே யில்லாதவர்கூறும் கீழ்த்தரமான இழிமொழிகளை அளவுக்கு மீறிகக்கியிருக்

கிறார். என்செய்வார் பாவம். அவரடைந்திருக்கும் மெய்வழி அனுபவம் அத்தன்மையதா யிருக்கிறது.

8—மவர்: இவர் ஒரு ஹரிஜனர் 5மவர் எழுதிக் கொடுத்து "ஆண்டி குடும்பன்" என்று கையெழுத்துப்போட்டிருக்கிறார். நாய்க்குத்தெரியுமா கொக்கு பிடிக்க என்றும், வாய் ஞானமில்லாமல் இதுசெயல் ஞானமானதால் நானடிமை பூண்டு பெற்றிருப்பதுபோல் எனக்கு நீர் அடிமை பூண்டால் சகலமும் காட்டத்தயாராயிருக்கிறேன் என்றும் இன்னம் பலவற்றும் எழுதியிருக்கிறார். நன்றாயிருக்கிறது நியாயம். தலைகீழ் பாடம்போலும்.

9—மவர்: உண்மை ஞானி ஒருவரால் உற்றது சொல்லப்பட்டால் ஒழிய அற்று நிற்பவைபொருந்தா. இது என்னுடைய அனுபவம் என்றும், உலகசௌளரியத்தைக் கருதி எலெக்டிரிசிடி எற்பட்டிருக்கிறது தேவையுடையவர் அதற்குள்ள அதிகாரியிடம் முறையே தெரிவித்து சௌளரியமடையாது வயரை அறுக்க முற்பட்டால் ஆபத்து எற்படுமென்றும், குரங்கு கதை யொன்றும் காட்டி எழுதப்பட்டிருக்கிறது.

மெஞ்ஞானி என்பவருக்கும் உற்றதை ஒரு ஞானிதான் சொல்லி யிருக்கவேண்டும், அப்படியே போனுல் முதல் ஞானிக்கு உற்றதுசொல்ல ஒரு ஞானியுமில்லாது போய்விடுகிறதே. அங்கிலே அநவஸ்தை தோஷத்தில் முடிந்துவிடுமே? உள்ளதை உணர்ந்தவர்கள் அவரவர்களே என்று முடிகிறது. இதைத்தான் சுவாமி விவேகானந்தர் சிகா கோவில் இந்துக்கள் மதம் அபௌளர்ஷேயம் என்றுகூறியுள்ளார். உள்ளதை ஒருவர் சொன்னுல் ஒன்று அறுந்ததைச்சொல்ல வேண்டும். உண்மை ஞானியால் தொடர்பாயுள்ளது என்று சொல்லப்பட்டால், அது தொடர்பாயுள்ளதே யன்றி அதில் அறுப்பு

இருக்கமுடியாது. அறுந்தது என்று சொல்லப்பட்டால் அது தொடர்பா யிருக்கமுடியாது. அறுந்தது பொருந்துமென்ற மதிதான் அஞ்ஞானமாகும். தொடர்பாயுள்ளதை அறுப்பதும் முடியாது. அறுந்திருப்பது பொருந்தவுமுடியாது. இது தத்துவத்தின் நியமம். ஒருவருக்கு எலக்டிரிக் வயர் என்பது ஒருவருக்கு வெறும் கயிருகயிருக்கலாம். பிரமாணத்திற்கு சுட்டப்பட்டது எப்படியும் வைத்துக்கொள்ளலாம். அதில் பயம் ஒன்றும் ஏற்பட நியாயமில்லை.

10—மவர் ஆண்டகை சமூகத்திற்கு எழுதிய கடிதத்தில் கண்ட விஷயங்கள் வந்தால் தாம் விடையளிப்பதாய்த் தெரிவித்திருக்கிறார். பதில் எழுத நாம் தடைசெய்யவில்லையே.

11—மவர் எவ்விதமான சந்தேகங்களை தெரிந்துகொள்ள விரும்பினல் எங்கள் குரீஸ்வரர் சன்னிதானத்துக்கு விண்ணப்பித்து கொள்ளும்படியு தெரிவித்திருக்கிறார். இப்போது நீங்களெல்லாம் கடிதமெழுதக்காரணமா யிருந்த எமது கடிதம் வேறுயாருக்குச் சமர்ப்பிக்கப்பட்டதோ?

12—மவர்: எங்கள் ஞானபிதா "அன்று மன்றுள் நடனம் செய்த நர்த்தனக் குஞ்சரம்" என்று கூறியிருக்கிறார். அன்று என்பது ஒரு காலவரையறையை குறிப்பிடுகிறது. சித்தாகாயத்தில் இயங்கும் சக்திக்கு சிற்சக்தியென்று சொல்வதுண்டு. அது ஒரு காலவரையறையின்றி பரமாணுவிலும் நடிப்பதை யுணராது வழி தவறி எங்கேயோ நர்த்தனக்குஞ்சரத்தை கண்டனுபவிக்கிறீர் பாவம்.

உலகம் போற்றும் உத்தமராகிய மகாத்மாகாந்திக்கு எவ்வளவோ சந்தேக வினுக்கள் வருகின்றன. சமயகர்த்தர் அவனை வருக்கும் கடிதம் மூலம் வினு விடுக்கிறார்கள். இம்மாதிரி இழி

வான முறையில் மாணாக்கர்களைத் தூண்டிவிடும் குருமார்களைப் பார்த்ததில்லை. நாம் இதற்கு முன் நாஸ்திக விஞ்ஞான நூலாகிய "கடவுளும், பிரபஞ்சமும்" என்ற மயிலை அட்வோகேட் தோழர் எம். சிங்காரவேலு பீ. ஏ., பீ. எல். அவர்களின் நூலுக்கு மறுப்பாக எழுதிய "ஆஸ்திக விஞ்ஞான சாகரம்" என்று நூலை பிரசுரித்தபோதும், காஞ்சிபுரம் நாஸ்திக குப்புசாமி அவர்களின் "ஆஸ்திக நாஸ்திக சம்வாதம்" என்ற நூலுக்கு மறுப்பாக எழுதிய "ஆஸ்திக மெஞ்ஞான தீபம்" என்ற நூலை பிரசுரித்தபோதும், நாகை டாக்டர் டி. சிவப்பிரகாசம் பிள்ளை அவர்களின் பஞ்சபூத ஜடப்பொருளே நித்தியமென்ற கொள்கையை மறுத்தபோதும் அவர்களெல்லாம் இக்குறுக்குவழியைப் பின்பற்றவில்லை. நமக்கு உலக மக்கள் எவரிடமும் பொறாமையோ, வெறுப்போ, இல்லை. 5000 வருடங்களுக்கு முன் புருஷோத்மனாலும் இடையில் ஆசாரிய சுவாமிகளாலும், கடையில் சுவாமி விவேகானந்தராலும் எவரும் பயனடையுமாறு முயற்சித்த சுத்த அத்துவைதத்தை எடுத்துகாட்டும் பணியே இந்நூல் எழுதக் காரணமாகும்.

தங்கள் அன்புள்ள,

P. Soundararaja Pillai



ஓம் தத் சத்.

# ஆனந்தமே பிரஹ்மம்

இதுதான்

# உண்மை ஞான அனுபவம்.

1. பிர்மமென்பதின் பொருள் கடவுள் காரணவஸ்து. சர்வத்திற்கும் ஆதாரம் எனப்படும்.

2. சத்து, சித்து ஆனந்தம் அனந்தம் அப்பிர்மத்தின் சொரூபமாகும்.

3. (சத்து இருப்பது) சித்து (விளங்குவது) ஆனந்தம் (பரமசுகம்) அனந்தம் (அகண்டம்) என்பது பொருள்.

4. அகண்டமாகவும் பிரகாசமாகவும், நித்தியமாகவு முள்ளது எது? அதுதான் ஆனந்தம்.

5. அவ்வானந்த சொரூபமே பிர்மமெனப்படுகிறது.

6. அதுவே உலகாகவும், ஜீவவர்க்கங்களாகவும், (விவர்த்தமாக) கற்பனு நாமரூபங்களாக தோன்றிக்கொண் டிருக்கிறது.

7. இப்பிரபஞ்சத்திலுள்ள ஜீவர்களனைத்தும் இன்ப விழைவைப் பற்றியே இயங்கிக்கொண்டிருக்கின்றன.

8. கிடவர்க்கங்கள் உண்பதும், பிரகிருதியை புணர்வது மான இன்பம் தவிர வேறு எவ்வித பிரஞ்ஞையுமற்றிருக்கிறது.

9. ஊர்வனவர்க்கம் ஆகாரம் மைதுனம், தன்னின உணர்ச்சிமட்டுமுடையதாயிருக்கிறது. பட்சி இனங்களோ வேற்றின உணர்ச்சியும் அவ்வுணர்ச்சியின் பிரதிபந்தத்தால் சிறிது துக்கமுடையனவாயுமிருக்கிறது.

10. மிருகாதி வர்க்கங்களோ ஆகாரம் மைதுனம், உலகின் சகல காட்சிகளிலும் பயங்கர உணர்ச்சியும், அப்பிரதிபந்தத்தால் மத்திப துக்கமுமுடையனவாயிருக்கின்றன.

11. பகுத்தறிவுற்ற மக்களினமோ அஞ்ஞானமென்ற பிரதிபந்த வயப்பட்டு துக்கமுடைய மயக்கமடைந்து பாதவித்து சுகவிழைவை எய்த பகீரதமுயற்சி புரிந்துவருகிறார்கள்.

12. அம்முயற்சியின் பரமபிரயோஜனமே ஆனந்தானுபூதியாகும்.

13. அச்சித்தியை மக்களினங்கள் அனுபவநிலைக்கேற்ப அடைந்த பிரதிபந்த நீக்கத்தெளிவே பரமானந்தம், நிர்மலானந்தம், அன்பானந்தம், ஞானானந்தம், யோகானந்தம், அருளானந்தம், வித்தையானந்தம், ஆத்மானந்தம், அத்வைதானந்தம், அமிர்தானந்தம், சத்தானந்தம், சித்தானந்தம், நிஷ்களம், சகளம், விமலம் வியோமம், துரியம் துரியாதீதம் நிர்மலம், நிராமயம் முதலிய ஆனந்தங்களெனவும் ஸ்தூல சூட்சம சங்காதங்களின் சம்பந்தத்தாலுண்டாகும் விஷயானந்தங்களெனவும் அனுபூதியுற்ற அறிஞர்களால் கூறப்படுகிறது. "பிரதிபந்தம்" என்பது ஒரு பொருளின் உண்மை சொரூபத்தின் இலக்ஷணத்தை உணராது வேறு வேறு சொரூபமாக உணர்வதில் ஏற்பட்ட அறியாமையும் வேறு வேறு சொரூப கற்பனையுமாகும்.

14. பிரதிபந்தத்திற்கு காரணம் பேதம், பேதத்திற்கு காரணம் ராகதுவேஷம், ராகதுவேஷ காரணம் அனுகூலபிரதிகூலபுத்தி, அனுகூல பிரதிகூலங்கள் அஞ்ஞானத்தின் காரியங்களாகும். அஞ்ஞானம் சொரூபஞானத்தாலன்றி எவ்வித கர்மம், உபாசனை யோகம், அமிர்தம் பருகுதல் அமரிபுளி, ரசம் ஔஷதம் முதலிய காயசித்திகளாலும், ஆயிரம் பதினாயிரம் கோடிக்கணக்கான தேவவருடங்களாக சரீரத்தைக் காப்பாற்றி வைப்பதாலும், அணிமாதி சித்திகளின் சம்பந்தாலும் நிவர்த்தியாகாது.

15. சகல ஜீவர்களின் உண்மை சொரூபம் பிர்மம். அல்லது ஆத்மா என்றும் அதுவே ஆனந்தம் என்றும் உணராமல் விஷய சம்பந்தத்தால் ஜீவர்களுக்கு ஆனந்தமும் அதன் நீக்கத்தால் துக்கமும் ஏற்படுவதாக நவீன விஞ்ஞான ஆராய்ச்சியாளரும், ஏனையோரும் கூறுகிறார்கள்.

ஸ்ரீ ஷண்முகானந்தம்,
மாஜீ—காரியதரிசி,
வேதாந்த விசாரணைச் சங்கம்,
விஜயபுரம்—திருவாரூர்.

திருவாரூர்—விஜயபுரம்,

# வேதாந்த விசாரணைச் சங்க

## வெளியீடுகள்



### ஆஸ்திக விஞ்ஞான சாகரம்

விஞ்ஞான ஆராய்ச்சியின் மூலம் கடவுள் இல்லையென்ற தத்துவத்தை நிலைபெறச் செய்ய சென்னை தோழர் M. சிங்காரவேலு அவர்கள் B.A., B.L. இயற்றிய "கடவுளும், பிரபஞ்சமும்" என்ற நாஸ்திக நூலுக்கு ஆராய்ச்சி யநுபவ பூர்வமாய் ஆணித்தரமாய் மறுத்தெழுதிய உயரிய நூல். விலை அணா 4

### ஆஸ்திக மெஞ்ஞான தீபம்

"ஆஸ்திக—நாஸ்திக சம்வாத" மென்ற காஞ்சிபுரம் நாஸ்திக குப்புசாமியின் நாஸ்திக நூலுக்கு பிரமாண பிரமேயங்களுடன் எழுதப்பட்ட மறுப்பு நூல். விலை அணா 1

| | |
|---|---|
| மனித சக்தி | விலை அணா $\frac{1}{2}$ |
| அண்டகோளங்களின் அமைப்பு | விலை அணா $\frac{1}{2}$ |
| ஆத்மஞான அமுத மொழிகள் | விலை அணா 1 |
| ராஜகுஹ்ய ஞான வாசகம் | விலை அணா 1 |
| பிர்ம்ம ஞானம் என்னும் கைவல்ய ரகசியம் | விலை அணா 1 |
| உலகின் உண்மை யென்னும் மயக்க மயம் | விலை அணா 1 |

கிடைக்குமிடம் :

காரியதரிசி,

வேதாந்த விசாரணைச் சங்கம்

விஜயபுரம், திருவாரூர்.